# ஸ்ரீ ராமாநுஜன்—231



சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசனஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் **20** | ப்லவங்கஞு பங்குனிமீ 1968 மார்ச்சு | ஸஞ்சிகை **3**


## நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி—5.

**சிலமா தவஞ்செய்தும் தீவேள்வி வேட்டும்**
**பலமா நதியிற் படிந்தும்—உலகில்**
**பரம்பநூல் கற்றும் பயனில்லை நெஞ்சே**
**கரம்பனூ ருத்தமன்பேர் கல்.**

| | |
|---|---|
| நெஞ்சே | எனது மனமே!, |
| உலகில் | இந்நிலத்தில் |
| சில மா தவம் செய்தும் | சில மஹா தபஸ்ஸுக்களைச் செய்தும் |
| தீ வேள்வி வேட்டும் | அக்னி ஹோத்ரங்களைச் செய்தும் |
| பல மா நதியில் படிந்தும் | பல புண்ணிய நதிகளில் குடைந்தாடியும் போருவதனாலும் |
| பரம்ப நூல் கற்றும் | விரிவாக நூல்களைக் கற்பதனாலும் |
| பயன் இல்லை | யாதொரு பலனும் பெறலாகாது; (ஆதலால் இவற்றில் முயற்சியைவிட்டு) |
| கரம்பன் ஊர் உத்தமன் பேர் கல் | திருக் கரம்பன்பதியிலுறையும் உத்தமனுடைய திருநாமங்களை யோது. |

* * * உத்தமர் கோயிலென வழங்கப்படும் திருக்கரம்பனூரைப் பாடிய பாடல் இது. ஒரு நகரத்தையோ க்ராமத்தையோ அடைவதற்குப் பல வழிகளுமிருப்பதுபோல, எம்பெருமானைப் பெறுதலாகிற மோக்ஷப்ராப்திக்குப் பலவுபாயங்கள் சாஸ்த்ரங்களால் அறியப்படுவதுண்டு; சிலர் காயக்கிலேசரூபமான பெருந்தவங்களைச் செய்து அவற்றால் தங்களுக்கு முத்தி திண்ணமென்றிருப்பர்கள்; வேறு சிலர் வேதோக்தங்களான யாகங்களைச் செய்து முடித்து இத்தால் நமக்குப் பேறு கிடைத்தே தீருமென்றிருப்பர்கள்; மற்றுஞ்சிலர் *கங்கைகங்கையென்ற வாசகத்தாலே கடுவினைகளைந்திடகிற்குங் கங்கை முதலான புண்ணியநதிகளிற் குடைந்தாடி இத்தால் நமக்குப் பேறுதப்பாதென்றிருப்

பர்கள். இன்னுஞ்சிலர் *அவித்யயா ம்ருத்யும் தீர்த்வா வித்யயா அம்ருதமச்நுதே* *தமேவம் வித்வாந் அம்ருத இஹ பவதி* என்பது முதலான சுருதிவாக்கியங்களைக் கண்டு வித்யையைப் பெறுவதற்காகப் பரம்பிய நூல்களைக் கற்று அதனால் 'வைகுந்தமாநகர் கையதுவே' என்றிருப்பர்கள். ஆனால் இவற்றால் பலன் கிடைத்தேதீருமென்று அறுதி யிடப்போகாதென்றும், உகந்தருளின நிலமென்று வழங்கும் திவ்யதேசங்களில் ப்ராவண்யத்தினால்தான் பேறுதப்பாதென்றறுதியிடலாகுமென்றும் திண்ணிய அத்யவஸாயங் கொண்ட ஆசிரியர் இச்செய்யுள் அமைத்தது ஆழ்வார்களின் திருவுள்ளத்தை அடியொற்றி யென்க. திருமங்கையாழ்வார் *ஊன்வாடவுண்ணாது உயிர்காவலிட்டு உடலிற்பிரியாப் புலனைந்தும் நொந்து, தான்வாடவாடத் தவஞ்செய்யவேண்டா..... தில்லைத் திருச்சித்திர கூடஞ்சென்று சேர்மின்களே* என்றும், *காயோடுநீடு கனியுண்டுவீசு கடுங்கால்நுகர்ந்து நெடுங்காலம், ஐந்துதீயூடு நின்று தவஞ்செய்யவேண்டா......தில்லைத்திருச்சித்திரகூடஞ் சென்று சேர்மின்களே* என்றுமருளிச்செய்ததை காண்க. தவஞ்செய்வதும் வேள்வி புரிவதும் புண்யநதிகளாடுவதும் பரம்பநூல் கற்பதும் பயனற்றது என்று பழிப்பதில் முக்கிய நோக்கன்று; திவ்யதேச ஸேவை தாமதமின்றித் திண்ணமாகப் பலனளிக்கு மென்பதுவே இங்கு விவக்ஷிதம். இவ்வாசிரியர் தாமே அழகரந்தாதியிலும் "செய்தவராக வருந்தியும் தீர்த்தத் துறைபடிந்தும், கைதவராகமங்கற்றுமென்னாம்?" என்றார். திருவரங்கக் கலம்பகத்திலும் "காயிலைதின்றுங் கானிலுறைந்துங் கதிதேடித் தீயிடை நின்றும் பூவலம்வந்தும் திரிவீர்காள்!, தாயிலுமன்பன் பூமகள்நண்பன் தடநாகப், பாயன் முகுந்தன் கோயிலரங்கம் பணிவீரே" என்றார்.

இங்குக் கரம்பனூருத்தமனுடைய திருநாமத்தைக் கற்கும்படியாகக் கூறியது அத்தலத்தைத் தொழுமாறு கூறியதற்குப் பரியாயமாகும். அன்றி, அத்தலத்திற்குச் சென்று சேவியாவிடினும் அத்தலத்துறையும் பெருமான் திருநாமத்தைக் கற்றாலும் போதும் என்று கூறியவாறுமாம்.

இத்தலத்தெம்பெருமானுக்கு உத்தமனென்று திருநாமம். "கரம்பனூருத்தமனை" என்று திருமங்கையாழ்வாருடைய மங்களாசாஸனம். பெரிய திருமொழியில் (5—6—2.) இப்பாசுரத்திற்கு வியாக்கியானமிட்டருளின பெரியவாச்சான்பிள்ளை—"வழிக்கரையிலே திருவாசலுக்கொரு கதவிடாதே வந்து கிடக்கிறவனை" என்றார். அதிகம்பீரமான இந்த ஸ்ரீஸூக்தியின் ஆழ்ந்த கருத்தை அறியப்பெறாத அரும்பதவுரைகாரர்—"எல்லாரும் நடக்கும் வழியாகையாலே ஸேவிப்பார் மிகுகையால் கதவிட அவஸரமில்லையென்று கருத்து" என்றெழுதி வைத்துள்ளார். இதுவன்று கருத்து. இந்த உத்தமர்கோயில் பெரியவாச்சான்பிள்ளை காலத்தில் உபபத்திக்குறைவினால் கோபுரவாசலுக்குக் கதவு இல்லாமலிருந்தது. இது உபபத்திக் குறைவினாலென்பதைக் காட்டாமல் எம்பெருமானுடைய ஸௌலப்யாதிசயம் விளங்குவதற்கு இதை அநுகுணமாக்கி, அதனாலேயே அத்தலத்தெம்பெருமான் உத்தமனென்று உரியதிருநாமம் பெற்றதாகப் பெரியவாச்சான் பிள்ளை திருவுள்ளம்பற்றினர். கதவு இருந்தால் அதை அடிக்கடி சாத்தவும் தாளிடவும் நேரும். அப்போது எம்பெருமானுடைய ஸேவைக்கு தௌர்லப்யம் விளையும். அது உத்தமத்வத்திற்குக் குறையாகும். காலநியமமும் அதிகாரி நியமமுமின்றிக்கே எப்போதும் எல்லாரும் வந்து புகலாம்படி [கதவின்றிக்கே] யிருக்கையினாலே உத்தமனென்கிற திருநாமம் ஔசித்யம் பெற்றதென்று ரஸோக்தியாக அருளிச்செய்தபடி.

கதம்பமுனிவர்க்குக் காட்சிதந்தவிடமென்பது பற்றிக் 'கதம்பனூர்' என்றிருந்தது கரம்பனூரென மருவிற்று. ... ... ... 5

# நினைவுக்குவருவன நவிலக்கேளீர்

## (6)

அடியேன் சிசுபாலவத மஹா காவ்யமென்கிற மாக காவியம் வாசிக்கும்போது அதில் நான்காவது ஸர்க்கத்தில் ரைவதக கிரி வர்ணனம் வெகு அற்புதமாக நிகழ்வதை மகிழ்ந்து வாசித்துக்கொண்டிருந்தேன்; அதில் பத்தாவது சுலோகம் "முதே முராரே ரமரைஸ் ஸமேரோ ராநீய யஸ்யோபசிதஸ்ய ச்ருங்கை:, பவந்தி நோத்தாமகிராம் கவீநாம் உச்ச்ராய ஸௌந்தர்யகுணா ம்ருஷோத்யா:" என்பது. கண்ணபிரானுடைய ஸந்தோஷத்தின் பொருட்டுத் தேவர்களால் மேருமலையின் சிகரங்களைக் கொணர்ந்து அபிவிருத்தி செய்யப்பட்டதான ரைவதகமலையின் உயர்த்தியையும் அழகையும் வருணிக்கிற கவிவாக்குக்கள் பொய்யுரையாகமாட்டாவென்பது இந்தச் சுலோகத்தின் கருத்து. கவிகள் எதைப் பேசினாலும் அதிசயோக்தி யலங்காரத்தில் வைத்துப் பேசுவது இயல்பாதலால் இல்லாததை ஏறிட்டுச் சொல்லுகிறார்களென்னுங் காரணத்தினால், பொய் சொல்லுகிறவர்க ளென்கிற அபக்யாதி பெரும்பாலும் கவிகளுக்கெல்லாமுண்டு: ஆனால் ரைவதகபர்வத விஷயத்தில் மட்டும் அந்த அபக்யாதிக்கு அவகாசமே கிடையாது; கவிகள் ஸத்யவாதி களேயொழிய அஸத்தியவாதிகளல்லர் என்று இந்த ச்லோகத்தில் ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ச்லோகத்தின் வியாக்கியானத்தில் மல்லிநாதர் "மேருச்ருங்க—அஸம்பந்தேபி ஸம்பந்தகதநாத் அதிசயோக்தி:" என்றெழுதி முடித்திருக் கிறார். ஸ்வபாவோக்தி யலங்காரமென்று எழுதாமல் அதிசயோக்தி யலங்காரமென்றே எழுதிவைத்தார். அதிசயோக்திக்கு ஆஸ்பதமில்லை என்று மூலத்தில் முக்த கண்டமாகச் சொல்லப்பட்டிருக்க, அவ்விடத்திலேயே அதிசயோக்தியென்று எழுதிவைப்பது பொருந்துமோவென்று வித்யார்த்தி தசையில் விசாரம் செய்துகொண்டிருந்தேன். மலையின் உயர்த்தியைப்பற்றியும் அழகு முதலிய குணங்களைப்பற்றியும் அதிசயோக்திக்கு இடமில்லை யென்பது மூலகாரருடைய அபிப்ராயம். மேரு பர்வதத்திலிருந்து சிகரங்களைக் கொணர்ந்து அபிவிருத்தி செய்ததாகச் சொல்லப்பட்ட விஷயம் இல்லாததைச் சொல்லுவதேயாதலால் இந்த அம்சத்தில் அதிசயோக்தியென்றது பொருந்தும் என்று பண்டிதர்கள் ஸமாதானம் சொல்லுவார்கள். அது நிற்க. அந்த ரைவதக மலையைப்பற்றி விசேஷ வர்ணனைகளை அற்புதமாக வாசித்தபோது, இந்த மலை வாஸ்தவமாக பூலோகத்திலுள்ளதானால் அங்கே சென்று இதை அவசியம் நாம் கண்டுகளிக்க வேண்டுமென்று ஆசை கிளர்ந்தது. மாக காவியம் வாசித்து முடித்தபிறகுங்கூட நெடுநாள்வரையில் இந்த மநோரதம் நெஞ்சில் ஒரு பக்கத்தில் அபரிமிதமாக இருந்துகொண்டேயிருந்தது.

ரைவதக பர்வதமென்பது குஜராத் மண்டலத்தில் [குர்ஜரதேசத்தில்] **ஜுநாகட்** என்கிற ஸ்டேஷனுக்கருகில் உள்ளது. ப்ரபாஸ க்ஷேத்திரம் போகிற வழியிலுள்ளதென்று கொள்க. அந்த தேசத்தார்களால் **கிரிநார்** என்று வழங்கப்படுகிற அந்த மலையின்மேல் வெகுதூரத்திற்கப்பால் ஒரு ஸ்ரீ வைஷ்ணவ மந்திரமுள்ளது. அதற்கு **பத்தரசட்டி**யென்று பெயர். அவ்விடத்தில் ஒரு ஸம்ப்ரோக்ஷணம் செய்ய ப்ராப்தமாயிற்று. அஸ்மதாசார்ய ரான ஸ்ரீ காதிஸ்வாமியின் திருவடி ஸம்பந்திகள் அந்த ஸ்தானத்திற்கு அத்யக்ஷர்களாத

லால் அவர்கள் ஸ்ரீ ஸ்வாமியை அவ்விடமெழுந்தருள ப்ரார்த்தித்திருந்தார்கள். ஸ்வாமி அப்போது மார்வாட ப்ராந்தத்தில் பெரிய ஜைத்ரயாத்ரை செய்துகொண்டிருந்தபடியால் அங்கே யெழுந்தருள ஸௌகரியப்படாமல் அடியேனுக்கு ஸ்ரீமுக மநுக்ரஹித்தருளினர்—'தேவப்பெருமாள் ஸன்னிதி அர்ச்சகருடனும் நாலைந்து வைதிகஸ்வாமிகளுடனும் அங்கே நீ சென்று அந்த ஸம்ப்ரோக்ஷணத்தைப் பூர்த்திசெய்வித்துவருவது' என்று நியமித்தருளி யிருந்தார். தேவப்பெருமாள் ஸன்னிதியில் உயர்ந்த அர்ச்சகராயிருந்த ஸ்ரீநிவாஸ பட்டரையும் நமது பாடசாலையில் உபயவேத நிர்வாஹகர்களாயிருப்பவர்களையும் இரண்டொரு பரிசாரகர்களையும் அழைத்துக்கொண்டு அவ்விடம் செல்ல நேர்ந்தது. பாம்பே, அஹமதாபாத், ராஜகோட், ஜைடல்ஸர் முதலானவிடங்களைக் கடந்து வெகுதூரத்திற் கப்பால் போகவேண்டியதாயிற்று. ஸ்ரீ காதிஸ்வாமி அடியோங்களுடைய வருகையைப் பற்றி முன்னுடியே ஆங்காங்குத் தெரிவித்தருளியிருந்தபடியால் எங்கும் விசேஷமாக உபசரிக்கப்பெற்று (**கிரிநார் என்கிற**) ரைவதக பர்வதத்தின் அடிவாரம் சென்று சேர்ந்தோம். மாலை நான்கு மணிக்கு மலையேற ஆரம்பித்தோம். மலைப்படிகளின் அழகு வாசாமகோசரம். மேடுபள்ளமில்லாமல் ஸமரீதியில் அகலமான படிகள் பல்லாயிரக் கணக்கிலுள்ளன. அப்போது வயது முப்பதுக்கு ஸங்நிஹிதமாகையால் சிரமமென்பது அடியோடு தோன்றாமல் வெகு உத்ஸாஹமாக நடந்து செல்லுகிறபடி. ஆறுமணிக்கு சந்திரோதயமாக ஆச்சரியமான நிலா ஒளிர்கின்றது. போகப்போக வழி மாளவேயில்லை. இரவு பதினொருமணியாகியும் குறிப்பிட்ட ஸ்தலம் வரவில்லை. ஏகாகாரமாக ஏழுமணி காலம் ஏற்றமாகவே நடந்தபடியால் சிரமம் தோன்றத் தொடங்கியது. இடையில் இளைப்பாற முடியாதபடி அன்றிரவே அந்த **பத்தர்சட்டி** ஸ்தானம் சேரவேண்டிய அவசிய மிருந்தது. வெகு சிரமத்தோடு சென்றுகொண்டிருக்கையில் மிகப்பெரிய கோவிலும் ப்ராகார கோபுர மண்டபாதிகளும் தென்பட்டன. அவற்றைக் கண்டவுடனே "மந்யே ப்ராப்தாஸ் ஸ்ம தம் தேசம்" என்றுப்போலே நினைத்து ஆனந்தமாக அந்தக் கோவில் வாசலுக்குப் போனதும் "இதுவொரு ஜைநமந்திரம்; இதுவன்று ப்ராப்யஸ்தலம்; இன்னும் இரண்டு மூன்று மணிகாலம் நடந்து சென்றே அந்த ஸ்தானம் சேரவேணும்" என்றார்கள். அச்சொல் செவிப்பட்டவுடனே அசக்தி அதிகரிக்கத் தொடங்கிற்று; கால் விழுந்திட்டது. ஆனாலும் சென்று சேர்ந்தாகவேண்டும்; ஸுந்தரபாஹுஸ்தவத்தை யநுஸந்தித்துக்கொண்டே நடந்துசெல்லவாரம்பித்தோம். அபர ராத்ரியில் குறிப்பிட்ட விடத்தை யடையலானோம்.

அவ்விடம் ஏகாந்த ப்ரதேசமாய் அதிரமணீய ஸ்தலமாயிருந்தது. நீர்வாய்ப்பும் நிழல்வாய்ப்பும் வருணிக்கமுடியாததே. அங்கே வடதேசத்துப் பண்டிதர்கள் இருபது முப்பதுபேர்கள் இதம்பரமாக வந்திருந்தார்கள். மூன்றுநாள் அங்கே தங்கியிருக்க நேர்ந்தது. அப்போதைய ஆனந்தாநுபவம் 47 வருஷமானாலும் அடியேனுக்கு தினப்படியாக நினைவுக்கு வருவதுண்டு. அடிக்கடி இங்கு வரவேணுமென்று அப்போது உத்கண்டை யுண்டாயிற்று. பிறகு அந்த மார்க்கமாக ப்ரபாஸக்ஷேத்திரத்திற்கு நான்குதடவை செல்ல நேர்ந்தும் பர்வதாரோஹணச்ரமத்தை நினைத்து அங்கு இறங்கவில்லை. ... ... ❀

## — கடிதங்கள் —

# "திருமழிசையாழ்வாரைப்பற்றி உத்யாநபத்ரிகை."

[பூவிருந்தவல்லியிலிருந்து ஸ்ரீமான். உவே. பத்தங்கி. ரங்காசாரியார் எழுதுகிறார்.]

திருப்பதியிலிருந்து வெளிவரும் உத்யாநபத்ரிகை (புஸ்தகம் 3, ஸங்க்யா 9, பக்கம் 155-ல்) "பக்திஸார:—திருமழிசையாழ்வார்" என்று மகுடமிட்டு எழுதிவருகையில் "இவ்வாழ்வார் நான்முகன் திருவந்தாதியும் திருச்சந்தவிருத்தமும் ஸாதித்தா"ரென்றெழுதி, இவற்றுள் திருவந்தாதி (96) தொண்ணூற்றாறு பாசுரங்கள் கொண்டதென்றும், திருச்சந்த விருத்தம் (126) நூற்றிருபத்தாறு பாசுரங்கள் கொண்டதென்றும் எழுதப்பட்டுள்ளது. "ஷட்விம்சதிசத (126) காதாரூப:" என்று நிஸ்ஸந்தேஹமாக எழுதப்பட்டுள்ளது. இது எழுதிய ஸ்ரீ D. T. தாதாசாரியவர்களை ஸமீபத்தில் ஸந்திக்க நேர்ந்தபோது "திருச்சந்தவிருத்தத்தில் நூற்றிருபது பாசுரங்களே உலகமெல்லாம் ஓதிவருகிறது: தேவரீர் அதிகப்படியாக ஆறு பாசுரங்கள் எழுதியிருப்பது எப்படி?" என்று கேட்டேன். அதற்கு அந்த ஸ்வாமி சிறிதும் மயங்காமல் உடனே ஸாதித்த விடையாவது, நான்முகன் திருவந்தாதித் தனியன் ஒரு பாட்டும், திருச்சந்தவிருத்தத் தனியன்கள் இரண்டு பாட்டும், உபதேசரத்தினமாலையில் *தையில் மகமின்று *மன்னுதிருமழிசை* என்கிற இரண்டு பாசுரங்களும், இயற்சாத்தில் *மழிசையர்கோ னென்றுவரும் *ஊழிதொறு மூழிதொறு மென்கிற பாட்டும் ஆக ஆறு பாசுரங்கள் இல்லையா? இவற்றைச் சேர்த்துப் பெரியார்கள் 126 என்று வழங்கிவருவதாக அறிந்து நான் "ஷட்விம்சதி (126) சதகாதா......" என்றெழுதினேனென்றார். அதன்மேல் அடியேன் வினவினேன் "*பூதம்ஸரச்ச* என்னும் சுலோகத்தில் 'ஸ்ரீ பக்திஸார' என்று வருவதனால் அதையுங் கூட்டிக்கொள்ள வேண்டாவோ? என்று. 'அது ஸம்ஸ்க்ருத ச்லோகமாகையாலே இந்த க்ரமத்தில் கூட்டிக்கொள்ளத் தகாது' என்று சொல்லிவிட்டார். மேலும் வினவினேன்—'இராமானுச நூற்றந்தாதியில் *இடங்கொண்ட கீர்த்திமழிசைக்கிறைவன்* என்னும் பாசுரம் தமிழ்தானே; அதைக் கூட்டிக்கொள்ளவேண்டாமோ?' என்று. அது உபலக்ஷணமே யென்று சொல்லிவிட்டார்.

'பிரபந்தசாரத்திலிருந்து கூட்டிக்கொள்ளத் தக்கது ஒன்றுமில்லையோ?' என்றேன். அதைப்பற்றிப் பிறகு பேசுவோமென்று சொல்லிக்கொண்டே நெகிழ்ந்தார். இப்படி ஸம்பிரதாயமுண்டா? என்பதை அடியேன் தெரிந்துகொள்ள விரும்பி இந்த விண்ணப்ப மெழுதிக் கொண்டேன். ... ... ...

இங்ஙனம்,

P. V. ரங்கநாததாஸன்.
(திருக்கச்சிநம்பி தேவஸ்தானம்)

இதற்கு ஆலோசித்துத்தான் விடை தெரிவிக்கவேண்டும். — (பத்ராதிபர்.)

## 2. ஸ்ரீமத் பரமஹம்ஸ. எம்பார்ஜீயர் ஸ்வாமியின் ஸ்ரீமுகம்.

ஸ்ரீபெரும்பூதூரில் எம்பார்ஜீயர் மடாதிபதியாக எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமத் பரமஹம்ஸ. அப்பன் சடகோபராமாநுஜ ஜீயர் ஸ்வாமி அருள்செய்த ஸ்ரீமுகம்...... ஸ்ரீசௌரிப் பெருமாளுடைய மாசி மகோத்ஸவத்திற்கு நான் திருக்கண்ணபுரம் போயிருந்தபோது அவ்விடத்தில் திருக்கோயில் பத்ரிகையின் நேற்று ஆவணி மாதத்து இதழில் (67. ஸெப்டம்பர்) வெளிவந்துள்ள **"வழிகாட்டும் பெருமான்"** என்று மகுடம் புனைந்த வொருவியாஸம் தேவகோட்டை. சிவஸ்ரீ தத்புருஷதேசிகரென்கிற இராமநாதன் செட்டியாரால் எழுதப்பட்டுப் பிரசுரமாகியுள்ளதை ஒருவர் என்னிடம் கொணர்ந்து வாசித்துக் காட்டினர்; அதில் ஒரு பகுதி வருமாறு—"விருப்பங்கள் நிறைவேறவும் வேண்டிய பேறுகளைப் பெறவும் திருமால் சிவபெருமானைப் பூசித்த திருத்தலங்கள் பல நமது தென்னாட்டிலுமுள்ளன. அவற்றுள் சில திருமாலுக்குச் செல்வவளத்தை வழங்கினவென்பதும் அறியத்தக்கனவாகும். ........திருமகள் கொழுநனுகிய திருமால் செல்வத்தையாக்குவதற்குச் சிவபெருமானிடத்து வேண்டிக்கொண்டமையாலும்...... யார் எதைவேண்டினுலும் இல்லையென்னுது ஈயும் பெருங்கொடைவள்ளல் சிவபெருமானொருவரே. ....." இத்யாதி. இங்ஙனேயெழுதியிருப்பது பிராமாணிகமா என்பதை தேவரீர் ஆராய்ந்து ஸ்ரீராமாநுஜன் மூலமாக வெளியிடவேணும் என்று ஸ்ரீஜீயார் ஸ்வாமி நியமனம். இதைப்பற்றித் தெரிவிக்கவேண்டியவற்றை மேலே தெரிவிக்கிறேன்.

சில வருடங்களுக்குமுன்பு ஸ்ரீமத் காமகோடி சங்கராசாரியஸ்வாமிகளின் பிரசங்கங்களுக்கு விடையிறுக்க அவசியம் நேர்ந்தபோது **ஸ்ரீ மஹாவிஷ்ணு ஸாம்ராஜ்யம்** என்கிற நூலை நாம் வெளியிட்டிருக்கிறோம். அஃது உலகமெல்லாம் ப்ரவியுள்ளது. அதை இந்த தேவகோட்டையாசிரியரும் கண்டிருக்கிறுரென்பதில் ஐயமில்லை. ஆனால் அது வெளிவந்து பத்துபன்னிரண்டு ஆண்டுகள் ஆய்விட்டபடியால் அதைப் புதுப்பித்துக்கொள்ளவேண்டி இந்த தத்புருஷதேசிகர் கிளம்பியிருக்கிறார் போலும். அந்த நூலில் நாம் மிக விரிவாக எழுதியுள்ள பல விஷயங்களை விட்டிட்டு இவ்வாசிரியருடைய வியாஸத்தில் மேலே எடுத்துக் காட்டியுள்ள பகுதிக்கு அவசியமான விடையை மட்டும் மேலே ப்லவங்க பங்குனிவிசாக விசேஷ மலரில் ஒரு பகுதியாக வெளியிடுவோம்.

இங்ஙனம்,

**பத்ராதிபர்.**

---

**சந்தாதாரர்களுக்கு அறிவிப்பு;**—ஒவ்வொரு இங்கிலீஷ் மாதத்திலும் 10 தேதிக்குள்ளாக பத்திரிகை வெளிவரும். கிடைக்கப் பெறுதவர்கள் 15 தேதிக்குள் நமக்குத் தெரிவிக்கவேண்டியது. சந்தாத்தொகை செலுத்தினவர்களுக்கே இந்த அறிவிப்பு.

**—மானேஜர்.**

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

# ப்லவங்க பங்குனிவிசாக விசேஷ மலர்.

## எழுபத்தேழுபிராயப் பூர்த்தியில் நீசனேன் நிறையொன்றுமிலேன் செய்யும் விண்ணப்பம்.

**(21—2—68ல் எழுதுவது)**

அடியேன்பால் அந்தரங்க ப்ரீதியுள்ள பல ஆப்தர்களின் உள்ளத்தில் 21—2—64 என்கிற தேதியானது ஊன்றியிருப்பதாக அறிகிறேன். இன்று 21—2—68. கீழே நான்கு வருடங்கட்கு முன் 21—2—64 என்கிற தேதி. அன்றுதான் அடியேனுக்கு



ஹ்ருதயகோசக் கோளாறு ஏற்பட்டு பகவத் பாகவத ஆசார்ய க்ருபையினுல் உயிர்ப்பிச்சை பெற்று ஒருவாறு வாழ்ந்து வருகின்றேன். பேரருளாளனது பரம கருணையினுல் நாற்பத்தெட்டு மாதங்கள் வாழ்ந்ததற்கு ஞாபகச் சின்னமாக நாற்பத்தெட்டு விஷயங்களை இந்தப் பங்குனிவிசாக விருந்தாக அன்பர்களுக்கு அளிக்கின்றேன். எழுபத்தாருவதுபிராயப் பூர்த்திக்காகத் தொடங்கின **ஸ்ரீ பாஷ்யாதிகரணமெழுபத்தாறும்,** எழுபத்தேழு பிராயத் தொடக்கத்திற்காக உபக்ரமித்த **எழுபத்தேழு பெரியார்களின் பெருமையும்** பெரிய விஷயங்களாகையாலே க்ரமேண முடிவுபெறும். இப்போது உத்தேசித்த நாற்பத்தெட்டு விண்ணப்பங்களை இம்மலரிலேயே முடித்திடுகின்றேன். ... ... ❋

## சமதமார்த்த விபர்யய விமர்சம்.

1. வேத வேதாந்த வேதாங்கங்களில் **சமம் தமம்** என்றிரண்டு பதங்கள் வழங்கி வருவது உலகமறிந்ததே. இந்தச் சொற்களிரண்டுக்கும் பொருள் ஒன்றே. 'அடக்குவது' என்பதுதான் இரண்டுக்கும் பொருள். இவ்விரு சொற்களையும் ஒரேயிடத்தில் பிரயோகித்திருக்கக் கண்டால் புநருக்திதோஷம் வாராமைக்காகப் பொருளில் வாசிகாட்ட ப்ராப்தம். *வைகுண்டே து பரே லோகே* என்று ப்ரஸித்தமான சுலோகத்தில் *பக்தைர் பாகவதைஸ் ஸஹ* என்றுள்ளது. பகவதி பக்தா:—பாகவதா; ஆகவே பக்த பாகவத

சப்தங்கள் பரியாயமாயின. ஆனாலும் அர்த்தபேதம் கொள்ளவேண்டியதாகிறது. பொருத்தமான பொருள்வாசியைப் பெரியார் காட்டியுள்ளார்கள். திருப்பாவையில் *உள்ளத்துக்கொண்டு முனிவர்களும் யோகிகளும்* என்றவிடத்திலும் முநி–யோகி சப்தங்கள் ஒரு பொருளனவே; இங்கும் பொருள்வாசியைக் காட்டியுள்ளார்கள். பெரிய திருவந்தாதியில் *பூவையுங் காயாவும்*......இங்ஙனே பல காணலாம். இத்தகைய ப்ரயோகங்களை அஸ்மதாதிகள் செய்தால் குற்றங் குறை கூறலாம். மூவுலகும் சிரமேற் கொள்ளவேண்டிய நூல்களில் இங்ஙனே கண்டால் அறிவிற் சிறந்தவர்கள் புநருக்தி தோஷபரிஹாரார்த்தமாகப் பொருளில் வாசிகாட்டி விவரணம் செய்தே போருகிறார்கள்.

2. ப்ரக்ருதத்தில் **சமம் தமம்** என்கிற சொற்களைப்பற்றி ஆராய்ச்சி எழுகின்றது. பொருளில் வாசியில்லையென்று கூறினோம். ஆனாலும் வாசிகாட்டித் தீரவேண்டியதாகிறது. மஹாப்ராஜ்ஞர்களான மேலையார் பொருள் வாசிகாட்டி விவரணம் செய்துள்ளார்கள். தைத்திரீயோபநிஷத்தில் ***ருதஞ்ச ஸ்வாத்யாயப்ரவசநே ச*** என்னு மநுவாகத்தில் "தமச் ச ஸ்வாத்யாய ப்ரவசநே ச. சமச் ச ஸ்வாத்யாயப்ரவசநேச" என்றோதப்பட்டு வருகிறது. இங்கு **வித்யாரண்ய** பாஷ்யகாரர் 'பஹிரிந்த்ரிய நியமநம், அந்த: கரணநியமநம்' என்கிற வாசியைக்காட்டி பாஷ்யம் செய்தார். மற்றொரு பாஷ்யகாரரான பட்ட பாஸ்கரரோவென்னில் "விஹிதகர்மாநுஷ்டாநஜந்மா க்லாந்தி:– தம:; மித்த்யேந்த்ரியாணாம் அப்ரவ்ருத்தி:– சம;" என்று பாஷ்யமிட்டார். இந்த சமதம சப்தப்ரயோகஸ்தலங்கள் சாஸ்த்ரங்களில் விசேஷமாகவுண்டு. ப்ருஹதாரண்யகத்தில் *சாந்தோ தாந்த உபரதஸ் திதிக்ஷு:......*இத்யாதி. சாரீரக மீமாம்ஸையில் *சமதமாத்யுபேதஸ் ஸ்யாத்...... (3–4–27) இத்யாதி ஸூத்ரம். ஆங்காங்குள்ள விவரணங்களையெடுத்துக் காண்கவென்று நாம் தெரிவிக்க விரும்புகின்றிலோம்; அந்த ஸ்ரீகோசங்களை ஸம்பாதித்துக் காண்பது ச்ரமஸாத்யமன்றோ.

3. கீதாபாஷ்ய ஸ்ரீகோசம் அனேகமாய் அருமையற்றது. அதில் காண்பது எளிது. பகவத்கீதையில் 10, 16, 18 அத்யாயங்களில் (மூலத்தில்) சமதம சப்த ப்ரயோகமும் பாஷ்யத்தில் விவரணமும் உள்ளது. மூவிடத்து விவரணங்களினாலும் நாம் தெரிந்து கொள்வதென்னவென்றால், சமமென்றாலும் தமமென்றாலும் அடக்குவதென்று பொருள்; அடக்கவேண்டியவற்றில் அந்த: கரணமும் சேர்ந்தது, பாஹ்யேந்த்ரியங்களும் சேர்ந்தவை. **சமம்**—அந்த: கரணநிக்ரஹம்; **தமம்**— பாஹ்யேந்த்ரிய நிக்ரஹம்- என்று கொள்ளலாம்; அல்லது, **சமம்**—பாஹ்யேந்த்ரிய நிக்ரஹம்; **தமம்**—அந்த: கரண நிக்ரஹம் என்றுங்கொள்ளலாம்; இதில் ஒரு நிர்ப்பந்தமில்லை—என்பதுதான் வ்யக்தமாகத் தெரிந்து கொள்ளப்படுவது.

4. இதை மணவாளமாமுனிகள் ஸ்ரீவசனபூஷண வியாக்கியானத்திலும் ஆசார்ய ஹ்ருதய வியாக்கியானத்திலும் மிகத்தெளிவாக விளக்கியருளினர். எங்ஙனேயென்னில்; ஸ்ரீவசனபூஷணத்தில் (96.) *ஆத்ம குணங்களில் ப்ரதாநம் சமமும் தமமும்* என்ற விடத்து வியாக்கியானத்தில்—"சமமாவது—அந்த: கரண நியமனம்; தமமாவது பாஹ்ய கரண நியமனம்; 'சமச் சிந்தப்ரசாந்திஸ் ஸ்யாத் தமச் சேந்த்ரிய நிக்ரஹ:' என்னக் கடவதிறே. 'க்ஷமா ஸத்யம் தமச் சம:' (கீதை) என்கிறவிடத்தில் 'தம:- பாஹ்யகரண

நாம் அநர்த்த விஷயேப்யோ நியமநம்; சம:- அந்த:கரணஸ்ய தத்தா நியமநம்' என்றிறே பாஷ்யகாரரு மருளிச்செய்தது. மாறிச் சொல்லுமிடமுமுண்டு.'' என்றருளிச் செய்தார்.

5. ஆசார்யஹ்ருதயத்தில் (99.) *ஜந்மாந்தர ஸஹஸ்ர நற்றவங்களாலே* என்று தொடங்கும் பெரிய சூர்ணையில் [**விவேக சமாதிகள் வளர**] என்றவிடத்து வியாக்கியானத்திலும்—மேலே காட்டிய ஸ்ரீவசனபூஷண வியாக்கியான பங்க்திகளுண்டு. சிறிது வாசியுமுண்டு. (அதாவது) ''மாறிச் சொல்லுமிடமுமுண்டு'' என்றது ஸ்ரீவசனபூஷண வியாக்கியானத்தில்; ''மாறிச் சொல்லுமிடங்களுமுண்டு'' என்றது ஆசார்ய ஹ்ருதய வியாக்கியானத்தில். மேலே *சாந்தோ தாந்த உபரதஸ் திதிக்ஷு: .....'' இத்யாதி ச்ருதி வாக்யங்களையும் உதாஹரித்தருளியிருப்பதும் இவ்விடத்திற்கு விசேஷம்.

6. எம்பெருமானுர் கீதாபாஷ்யத்தில் மூன்றிடங்களில் சமதமப்பொருள் விவரணம் செய்தருளியுள்ளாரென்பது மறக்கத்தக்கதன்று. மூன்றிடங்களிலும் ஏகரூபமான விவரணம் கிடையாதென்பதும் திடமாக நெஞ்சிற்கொள்ளத் தக்கது. ஏகரூபமான விவரணத்தை ஏன் செய்தருளவில்லையென்னில்; அப்படியொரு நிர்ப்பந்தமில்லையென்று காட்டுவதற்காகவே யென்பர். இவற்றுள் முந்தினவிடமாகிய தசமாத்யாயத்தில் தாத்பர்ய சந்த்ரிகையில் நிகமாந்த மஹாகுரு பணித்திருப்பதாவது—சம தம பதங்களில் ஏதேனுமொன்றிருந்தாலும் அவ்வொன்றுக்கே பாஹ்யாந்தரகரண நியமனத்தைச் சொல்லுமாற்றல் நன்ருகவுண்டு; ஆயினும் ஒரேயிடத்தில் ஸமாநார்த்தகமான இரண்டு பதங்களையும் இட்டிருக்கையாலே புநருக்திதோஷம் புகாமைக்காக ஒரு பதத்திற்கு பாஹ்யகரண நியமனமும் மற்றெரு பதத்திற்கு அந்த:கரண நியமனமும் பொருளாகக் கூறிற்று—என்பதாக. இதனுல் இப்பதங்களுக்கு எவ்விதமாக விவரணம் செய்தாலும் குறையில்லை யென்று ஸ்பஷ்டமாகக் காட்டப்பட்டதாயிற்று.

7. ஆக, முந்துறமுன்னம் [பத்தாவதத்யாயத்தில்] செய்தருளின விவரணக்ரமத்திற்கு மாருக வேரெரிடத்தில் காணப்பட்டால், அதுவும் ஆப்ததமர்களுடையதாயிருந்தால் ப்ராமாணிகர்கள் செய்யவேண்டியதென்ன? 'இரண்டுபடியுமொக்கும்' என்றெழுதி நிற்க வேண்டுமத்தனை. ப்ரக்ருத சமதம விவரண விஷயத்தில் வ்யத்யாஸம் காணப்படுவது வ்யக்தம். கீழே நாமெடுத்துக்காட்டிய மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்திப்படியே எழுதிப் போந்தால் விசாரமேயில்லை. ஷோடசாத்யாய தாத்பர்யசந்த்ரிகையில் ''ஏதேந கேஷாஞ்சித் அநயோச் சப்தயோ: வ்யுத்க்ரமேண அர்த்த வ்யாக்யாநம் நிரஸ்தம்'' என்றெழுதப்பட்டிருப்பது நம்முடைய பாஷ்யகார ஸ்ரீஸூக்தியைக் கண்டிப்பதாக நன்கு விளங்கவில்லையா? கீழ் பத்தாமத்யாயத்தில் ஸ்வாமி யருளிச்செய்ததையும் அங்கு சந்த்ரிகையில் தாமெழுதியதையும் ஸர்வாத்மநா மறந்தன்ரே இங்ஙனமெழுதப்பட்டுள்ளது.

8. வஸ்துத: இப்படி நாம் நினைக்கவே தகாது. ஆனுல் உள்ள பங்க்தியைக் கொண்டு இங்ஙனல்லது வேறு சொல்லுவதற்கிடமில்லையே. வைதிக மநோஹரா 152ல் (பக்கம் 24ல்) இதைப்பற்றி நாம் எழுதினபோது **''ப்ரக்ஷேபசங்கா பலவதீ ந:''** என்றெழுதியுள்ளோம். தேசிக க்ரந்தங்களில் பலவிடங்களில் ப்ரக்ஷேபங்களையும் பாடஸ்கலனங்களையும் அங்யத்ர பரக்க உபபாதித்திருக்கிரேம். நாம் மட்டுமன்று; ப்ரஸித்த

வித்வான்களாய் தேசிகபக்தியில் குறையற்றவர்களும் இங்ஙனே நிரூபித்திருக்கிறார்கள். அந்த ரீதியில் ப்ரக்ருத ஸ்தலத்திலுள்ள "ஏதேந .....நிரஸ்தம்" என்கிற அநந்வித வாக்யத்தையும் ப்ரக்ஷிப்தமென்று இசைந்துவிட்டால் சங்கடமேயில்லை. 'ப்ரக்ஷிப்தமன்று, ஸுஸங்கதமே' என்று சிலர் வாதிப்பதனால் ப்ரக்ஷேபவாதமொன்று தவிர வேறு எந்த வழியும் ஏலாதென்று விரிவுக்கு அஞ்சாமல் நிரூபிக்கிறோம்.

9. **ஸுஸங்கதமே**யென்பவர் யாவரென்னில், வசஸ்ஸுதாவிசாரத்தில் தத்வடீகா ஸூக்தியை யநுவதித்து **"அத்ராஸ்தி பஹு அஸாமஞ்ஜஸ்யம்"** என்றெழுதி ப்ரஸித்தி பெற்றிருக்கும் பெரியாரே காண்மின். அவ்விஷயத்தை விளக்கமாகத் தெரிந்துகொள்ள விரும்புமவர்கள் ஸ்ரீராமாநுஜன் 229ல் வெளிவந்துள்ள ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்யே 9, 10, 11 வாக்யச்ரேணிகளில் காணலாம். அஸாமஞ்ஜஸ்ய கந்தமுமில்லாத விடத்தில் அஸாமஞ்ஜஸ்ய ஸ்தாபனம் பண்ணுமிப்பெரியார் வஸ்துகத்யா அஸாமஞ்ஜஸ்யம் ஸ்பஷ்டமான விடத்தில் அதை ஸ்தாபித்துப் புகழ் பெறுவது நலமன்றோ. ஆனால் ஈர்ஷ்யாஸூயைகள் புகுவிக்கும் வழிகளுக்கு வரம்பில்லையே. இவர் பண்ணும் ஸாங்கத்ய நிரூபணம் ஸமஞ்ஜஸமாயிருந்தால் அஞ்ஜலிபந்தத்துடன் இசையத் தட்டுண்டோ? அந்த நிரூபணம் 'ஸ்வயமபி லிகிதம் ஸ்வயம் ந ஜாநாதி' என்கிற முறையிலே சேர்ந்ததென்பதை நன்கு உபபாதிக்கிறேன். [அந்த நிரூபணம் உத்யாந பத்ரிகையில் புஸ்தகம் 3. ஸங்க்யா 9. பக்கம் 142ல் ***சம—தமௌ*** என்னும் மகுடத்தின்கீழ் உள்ளது காண்க.]

10. வாதத்தை வீணாகப் பெருக்காமல் சுருக்கமாக அமைக்கிறேன். "இதி ஆநந்த தீர்த்த பாஷ்யே" என்றும் "இதி பாமதீகார:" என்று மிப்புடைகளிலேயுள்ளவை வ்ருதா காந்தாரஸஞ்சார:. சமதமபதங்களுக்கு நிர்ப்பந்தமான வ்யவஸ்தையின்றிக்கே எவ்விதமாகவும் அர்த்தம் செய்யலாம், அதில் அநுபபத்தி ஏதும் கிடையாது என்று இசைந்தாயிற்று. "ப்ரௌடா க்ரந்தகாரா நியாமகம் கிஞ்சிதாச்ரயந்தி" என்பதை நாம் மறுக்க நினைக்கிலோம். இங்கு இது சொல்லவேண்டிய விஷயமன்று. இவ்விடத்தில் ஒரே ஒரு வாக்யத்தைப்பற்றித்தான் விசாரம். "ஏதேந கேஷாஞ்சித் அநயோச் சப்தயோ: வ்யுத்க்ரமேண அர்த்தவ்யாக்யாநம் நிரஸ்தம்" என்கிற ஒரு வாக்யத்தை ஒருங்கவிடவேண்டியதொன்றுதான் அபேக்ஷிதம். ஸமாதாதா எழுதுவது—நிரஸ்தம் என்பதற்குக் **கண்டிதம்** என்று அர்த்தமன்றென்றும், த்யக்தம் என்று அர்த்தம் என்றுமே. இங்ஙனே அர்த்தம் கொள்வதனால் என்னலாபமென்பதைப் பிறகு விசாரிப்போம். இவ்வர்த்தம் ஒரு சாஸ்த்ரஜ்ஞன் சொல்லுமதா? பொருந்துமதா? என்பதை முன்னம் விமர்சிப்போம்.

11. க்ரந்தங்களில் "ஏதேந நிரஸ்தம்; ஏதேந பராஸ்தம்" என்று பல்லாயிர மிடங்களில் காண்கிறோம். எங்கும் தள்ளப்பட்டதென்பதுதான் பொருள். இந்த தாத்பர்ய சந்த்ரிகையிலேயே பல விடங்கள் காணலாம். காணலாமென்று விட்டு விடுவோம் நாமல்லோம். காட்டுகிறோமொன்று. கீதையிலேயே ஆறுவது அத்யாயத்தில் மூன்றாவது சுலோகம் ***சம: காரணமுச்யதே*** என்று முடிகிறது. இங்கு **"சம:- கர்ம நிவ்ருத்தி:"** என்று ஸ்வாமி பாஷ்யம். பிறர் இங்ஙனே பொருள் கொள்ளாமல் வேறு பொருள் கொண்டதை யெடுத்துக்காட்டி இந்த நிகமாந்த மஹாகுருதாமே தாத்பர்ய

சந்த்ரிகையிலேயே "**ஏதேந—பரோக்தம் நிரஸ்தம்**" என்றருளியுள்ளார். இங்கு நிரஸ்த மென்றதற்கு த்யக்தமென்று பொருள். த்யக்தமென்னும் பொருளில் நிரஸ்த பதப்ர யோகத்தை ஓரிடத்திலாவது எடுத்துக் காட்டலாகுமோ?

12. "தோஷேண கலத்ரம் நிரஸ்தம்" என்றால் த்யக்தமென்று பொருள் படாதோ வென்பர். அங்கும் துஷ்டமென்று தள்ளப்பட்டதென்கிற பொருள்தவிர வேறொன்றும் தேறாது. இங்கு முக்கியமாக நோக்கவேண்டுவது **ஏதேந** என்கிற பதம். **ஏதேந** என்பதற்கு பாஷ்யகாரேண என்று பொருள் சொன்னால்தான் ஒருவாறு பொருந்தும். இப்பொருளை ஸமாதாதாவும் விரும்பவில்லை. நிரஸ்தம் என்றதற்குமேலே '**இதி ஜ்ஞாயதே**' என்றோ '**இதி த்ரஷ்டவ்யம்**' என்றோ இருந்தாலல்லது அந்வயியாது. **ஏதேந** என்பதற்கு 'ஏவம்விதேந விவரணேந' என்றல்லது வேறொரு பொருளும் சொல்லப் போகாது. ஆகவே நிரஸ்தமென்பதற்கு இவர் ஏறிடும் பொருள் ஏறாது, ஏலாது என்பது கல்வெட்டே.

13. ஸர்வக்லேசங்களையும் ஸஹித்துக்கொண்டு கேட்கிறோம். பரகீயம் வ்யாக்க்யாநம் பரித்யக்தம் என்று எதற்காகச் சொல்லுகிறார். இச்சொலவினால் என்ன லாபம்? இப்படி எங்கேனும் சொல்லியிருப்பதுண்டோ? இங்கு சந்த்ரிகையில் முக்கியமாக எழுதவேண்டியதென்ன? தசமாத்யாயக்ருத விவரணம் திருவுள்ளத்தில் பதிந்திருந்தால் ஸ்வாமி இங்கு வ்யுத்க்ரமேண வியாக்கியானம் பண்ணியிருப்பதாகத் தோன்றினால் அதற்கு உபபத்தி காட்டவேண்டியது கடமை. அதுதான் முக்கியமானது. தசமாத்யாய விஷயம் விஸ்ம்ருதமாயிருந்தபடியாலே சங்கராசார்யரை வ்யுத்க்ரமேண வியாக்கியானம் பண்ணினவராக எண்ணவும் கண்டிக்கவும் நேர்ந்துவிட்டது. அப்போதும் **ஏதேந** என்பதற்கு என்ன பொருளென்று கேட்டால் 'அஸ்மத்பாஷ்யகாரக்ருதேந விவரணேந' என்றுதான் பொருள் சொல்லியாகவேண்டும். 'சங்கரபாஷ்யத்தை எங்கப்பா தப்பென்று சொல்லிவிட்டபடியாலே அது தப்புதான்' என்ற பையாகுட்டி வாக்யார்த்தமே முடிந்ததாகும். ஆக, *ஏதேநேத்யாதி வாக்யம் ப்ரக்ஷிப்தமென்று கைகூப்பி நிற்பதே கௌரவமாகும். ஸமர்த்தநப்ரயாஸம் ஸமர்த்தக்ருத்யமாகாது.

14. தாத்பர்ய சந்த்ரிகாகாரருடைய ஸரணிக்கு ஏற்ப ஒன்று சொல்ல விரும்பு கிறேனிங்கு. இவர் தம்முடைய திருவுள்ளத்தில் தாமாகவொரு நிஷ்கர்ஷம் கொள்வர். அது பாஷ்யாதிகளில் இல்லாதது என்பதையும் திருவுள்ளம் பற்றியிருப்பர். ஆனால் அதை அப்படி காட்டியருளாமல் 'பாஷ்யாதிகளை உற்று நோக்கினால்—உட்புகுந்து நோக்கினால்—ஆழ்ந்து நோக்கினால் இந்த நிஷ்கர்ஷம் தெளியலாகும்' என்று ஸாதித்துவிடுவர். ரஹஸ்யத்ரயஸாரத்தில் சரமச்லோகாதிகாரத்தில் ஒரு விஷயத்தையெழுதி "இது *அநாவ்ருத்திச் சப்தாத்* என்கிற ஸூத்ரத்திலே விவக்ஷிதம்" என்றார். அடுத்தபடி தாம் செய்யவேண்டியதென்ன? அநாவ்ருத்தி ஸூத்ரத்திலே அவ்விஷயத்தை உபபாதித்துக் காட்டவேண்டும். விஸ்தரபயத்தாலே காட்டாமல் ப்ரதிஜ்ஞையளவிலும் நிற்கலாம். அப்படி நின்றிலர். உடனே ஸாதிக்கிறார்—"இந்த நிஷ்கர்ஷங்களெல்லாம் பாஷ்யத்திலே ஸத்ஸம்ப்ரதாயத்தோடேகூட சிரபரிசயம் பண்ணின மஹா ப்ராஜ்ஞருக்கு நிலமா யிருக்கும்" என்று. இந்நூலுக்கு ஏழு வியாக்கியானங்கள் தோன்றியிருக்கின்றன. அவற்றுள் ஸ்ரீமத் பரமஹம்ஸ. இஞ்சிமேட்டு ஸ்வாமியின் வியாக்கியானம் சிறந்த

தென்னலாம். அவர் சாஸ்த்ரஜ்ஞர்களிலும் ஸ்ரீபாஷ்யாதிகாரிகளிலும் சிறந்தவராகையாலே. அவர் இவ்விடத்திற்கு வியாக்கியானம் எழுதுகிறார்—"இது ஸூத்ரகாரர்க்கும் அபிப்ரேதமென்கிறார் **இது** இதி. கீழ்ச்சொன்ன நிஷ்கர்ஷங்களெல்லாம் சிலர்க்கே க்ராஹ்யமாமென்கிறார் **இந்த நிஷ்கர்ஷங்களெல்லாம்** இதி. சிலரை விசேஷிப்பிக்கிறார் **பாஷ்யத்திலே** இத்யாதிநா. **ஸத்ஸம்ப்ரதாயத்தோடு** இதி. குருபரம்பரையாகக்கேட்டு பரிச்ரமப்படவேண்டுமேயொழிய கேவல ஸ்வபுத்திபரிச்ரமமாத்ரம் போராதென்கிறது. அதில் ஸத்பதம் பாஷ்யகாரேதர ஸம்ப்ரதாயத்தை வ்யவச்சேதிக்கிறது. சிரசப்தம் அல்பகாலபரிசயம் போராதென்கிறது. **ப்ராஜ்ஞ** சப்தம் மந்த புத்திகளை வ்யவச் சேதிக்கிறது. **மஹச்** சப்தம் அதிலும் விஷ்ணுசித்த வரதாசார்யாதிகள் போன்றவர்களை ஜ்ஞாபிக்கிறது. **நிலமாயிருக்கும்**—ஸம்யக் க்ராஹ்யங்களாயிருக்கும்."—இவ்வளவேதான் இஞ்சிமேட்டழகிய சிங்கருடைய வியாக்கியானம். புத்தகத்தை யெடுத்துப் பாருங்கள்.

15. மேலே காட்டின விவரணங்கள் ஒன்றுகூட மூலத்திற்கு அபேக்ஷிதமன்று. "பாஷ்யத்திலே ஸத்ஸம்ப்ரதாயத்தோடேகூட சிரபரிசயம் பண்ணின மஹாப்ராஜ்ஞருக்கு நிலமாயிருக்கும்" என்கிற எளிய இவ்வாக்யத்திற்குக்கூட அர்த்தம் தெரிந்துகொள்ள மாட்டாதவர்களா ரஹஸ்யத்ரயஸாரம் ஸேவிப்பவர்கள். இங்கு அவசியம் விவரிக்க வேண்டிய விஷயம் எதுவென்றால், ஸ்ரீபாஷ்யத்தில் ஸத்ஸம் ப்ரதாயத்தோடேகூட சிரபரிசயம் பண்ணினவர்களுக்கே நிலமாகும் நிஷ்கர்ஷம் இன்னபடிப்பட்டது என்றும், அது அநாவ்ருத்தி ஸூத்ர ஸ்ரீபாஷ்யத்தில் இன்ன ஸ்ரீஸூக்தியில் விளங்காநின்றதென்றும் பரக்க நிரூபிக்கவேண்டியதன்றோ முக்கியமானது. சேட்டலூர் நரஸிம்ஹாசாரியரென்பவர் தாமெழுதிய ரஹஸ்யத்ரயஸாரவுரையிலும் இதுவேபோன்ற விவரணந்தானுள்ளது. ஆனால் ஒரு விசேஷம். அவர் *மயர்வறவென்மனத்தே மன்னினான்தன்னை* என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தையெடுத்துக்காட்டி "இப்படி ஆழ்வார் அருளிச்செய்திருப்பதினால் த்ரமிடவேதாந்தத்தோடு ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபம் பண்ணவேணும்" என்கிறார். "**நச உச்சிந்ந கர்மபந்தஸ்ய** இத்யாதி ஸ்ரீபாஷ்யவாக்யம் *மயர்வறவென்மனத்தே மன்னினான்தன்னை* என்கிற இப்பாட்டின் அர்த்தமென்பது ஸுவ்யக்தமாகும்" என்கிறார். அப்பாட்டுக்கும் இந்த பாஷ்ய வாக்யத்திற்கும் ஸம்பந்தகந்தமுமில்லையென்பது ஆறாயிரப்படி முதலான ஸகல வியாக்கியானங்களாலும் ஸுவ்யக்தம். நிகமபரிமலத்தில் பரிமளிக்கும்போலும். இது அஸம்பத்த ப்ரலாபமென்றுகொண்டே இஞ்சிமேட்டழகிய சிங்கர் இதைத் தொடாமலும் வேறொரு ஸ்ரீபாஷ்ய வாக்யத்தையெடுத்துக்காட்ட ஏதும் ஸ்புரியாமலும் சென்றிட்டார். அது ஆபத்தில்லாத வழியே.

16. ஸ்ரீராமாநுஜன் 229ல் நாம் வெளியிட்டுள்ள ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்ய—ப்ரதமாஹ்நிகத்தில் "பாஷ்யாதிக்ரந்தலேசோபியின் முகபீடிகை" என்றும் "பாஷ்யக்ரந்த லேசம் காட்டுமாறு வேண்டுதல்" என்றும் மகுடமிட்டு நாம் எழுதியுள்ள விஷயம் இங்கு நினைவூட்டப்படுகிறது. சேதநனுடைய ப்ரவ்ருத்திகளில் ப்ரதமப்ரவ்ருத்தியில் ஈச்வரனுக்கு ஔதாஸீந்யமென்றும் த்விதீயாதி ப்ரவ்ருத்திகளில் அநுமந்த்ருத்வமென்றும் ஸ்ரீபாஷ்யாதிகளில் நிஸ்ஸந்தேஹஸித்தமாயிருக்க அதிகரண ஸாராவளியில் பராயத்தாதிகரணார்த்த நிர்வாஹத்தில் (ச்லோ, 242.) *க்ஷேத்ரஜ்ஞாநாம் ஸமாநாமித்யாதியில் சேதநனுடைய ஸகலப்ரவ்ருத்திகளிலும் ஈச்வரனுக்கு ப்ரேரகத்வம் தாராளமாகவுண்டென்று

கூறி, இது ஸ்ரீபாஷ்ய—தீப—ஸார—தத்வஸாரங்களோடு விரோதிக்குமது என்பதைத் தாமே தெரிந்துகொண்டு *பாஷ்யாதிக்ரந்தலேசோபி அவஹிதமநஸாம் ஐதமர்த்தயம் பஜேத* என்று ஓங்கியடித்துவிட்டார். ஸ்ரீபாஷ்யாதிகளை நுட்பமாக ஊன்றி நோக்கினுல் அவற்றுக்கு இதுவே அர்த்தமென்று தேறலாம் போ—என்று முடித்திட்டார். ஸ்ரீபாஷ்யாதிகளுக்கு இது கண்டனமேயொழிய இவ்வர்த்தம் அவற்றில் காணமுடியா தென்பது கல்வெட்டு. *நிர்விஷ்டம் யதிஸார்வபௌமவசஸாம் ஆவ்ருத்திபிர் யௌவநம்* என்றும் *யதிப்ரவரபாரதீரஸபரேண நீதம் வய: ப்ரபுல்லபலிதம் சிர:* என்றும் *ஏரணி கீர்த்தி யிராமானுசமுனியின்னுரைசேர் சீரணி சிந்தையினேம் சிந்தியோமினித்தீவினையே* என்றும் பணித்தவர்க்கு ஸ்ரீபாஷ்யகார திவ்யஸூக்தி நிர்வாஹத்தில் மூன்று வகையான போக்குக்களைக் காணலாம். (1) மேலே உதாஹரித்த *பாஷ்யாதிக்ரந்தலேசோபிஸூக் திப்படியே பாஷ்ய விருத்தத்தை மறைத்துப் பேசுதல். (2.) "இந்த நிஷ்கர்ஷங்களெல்லாம் பாஷ்யத்திலே ஸத்ஸம்ப்ரதாயத்தோடேகூட சிரபரிசயம்பண்ணின மஹாப்ராஜ்ஞருக்கு நிலமாயிருக்கும்" என்ற கட்டளையிலே ஸ்ரீபாஷ்யத்திலில்லாததை இருப்பதுபோலக் காட்டுதல். (3.) கைவல்யவிசரத்தில் [ந்யாயஸித்தாஞ்ஜநத்தில்] ஸ்ரீபாஷ்ய ஸூக்திகள் ஸ்வமதாநுகூலமென்றும், கீதாபாஷ்ய ஸூக்திகள்மட்டும் ஸ்வமத விருத்தமென்றும் கருதி "ஏகக்ரந்த சகலாஸ்வாரஸ்யம் பஹுக்ரந்த ஸ்வாரஸ்யாய க்ராஹ்யம்" என்றெழுதி வைத்து பகவத்பாஷ்யகார ஸூக்தியை ஸாக்ஷாத்தாகவே கண்டித்தது. அஸ்வரஸ மென்பதும் அஸமஞ்ஜஸமென்பதும் ஹேயமென்பதும் பர்யாயமேயென்பதைப் பண்டிதவுலகமறியும். க்ராந்திகர்களுக்கு இது க்ஷுண்ணம்.

17. ப்ரக்ருதே சமதம சப்தார்த்த விசாரத்தில் ஷோடசாத்யாய சந்த்ரிகையிலுள்ள "ஏதேந......நிரஸ்தம்" என்கிற வாக்யம் சங்கரபாஷ்ய கண்டனமாகமட்டும் நில்லாமல் ஸ்வாமியின் தசமாத்யாய பாஷ்ய ஸ்ரீஸூக்திக்கும் கண்டனமாகத் தேறியிருப்பது அபலபிக்கவொண்ணுதாகையாலே மேலே நாம் விவரித்த மூன்று ப்ரக்ரியைகளிலே இதை எந்த ப்ரக்ரியையிலே சேர்க்கலாமென்று விமர்சித்தால் அந்த மூன்றிலும் சேராது. *அயமபர: காரகநியம:* என்னுமாபோலே இது நான்காவதுபடி. விஸ்ம்ருதி ப்ரயுக்தமாய் [அத ஏவ அபுத்திபூர்வகமான] கண்டனமென்பது இங்கு விசேஷம். ஏதேநேத்யாதி விவாதாஸ்பதவாக்யம் ப்ரக்ஷிப்தமேயென்று கைகூப்பி நின்றுல் ஒரு விபத்துமில்லையென்று நிகமித்தோமாஞேம். மேலும் சில கேண்மின்.

18. ஆளவந்தார் எம்பெருமானுர் ஆழ்வான் பட்டர் முதலான ஆசாரியர்கள் தர்க்கபாண்டித்யம் பெருதவர்களல்லர். வெகுநன்ருகப் பெற்றவர்கள். ஆனுல் "தர்க்க பாண்டித்யத்தாலே நினைத்ததெல்லாம் ஸாதிக்கவல்லோம்" என்று அவர்கள் திருக்கையால் எழுதப்பட்டிருக்கவில்லை. அவர்களிற்காட்டிலும் விசிஷ்டமான தர்க்கபாண்டித்யம் பெற்றவர் ரஹஸ்யத்ரயஸாரத்திலே அப்படி தமது திருக்கையால் எழுதிவைத்தார். ப்ரமாணசரணத்வமும் தமக்குள்ளதாக எழுதியிருந்தாலும் தர்க்கபாண்டித்ய பலமாகச் சொல்லிவைத்ததுதான் கார்யகாரியாயிற்று. இதை யாரும் மறுக்கவொண்ணுதபடி அபூர்வ விஷயமொன்று காட்டுகிறேன். கண்ணுடையீர் காண்மின். விரலுக்குத் தக்க மோதிரம் பண்ணவேணுமேயொழிய, மோதிரத்தைப் பண்ணிவைத்துக்கொண்டு அதற்குத் தக விரலைச் சீவுவாரில்லை. தர்க்கபாண்டித்யம் செய்வித்தபடி பாரீர்.

19. தயா என்னும் குணத்தின் ஸ்வரூபவிசாரத்தில் இக்காலத்தவர்களின் போராட்டங்கள் கிடக்கட்டும். இதைப்பற்றி விவாதம் விளையாதிருந்த காலத்தில் பகவத்

பாஷ்யகாரர் தெளிந்த திருவுள்ளங்கொண்டருளிச்செய்தது என்னவென்று பார்ப்போம். பகவத்கீதையில் (16-2.) "**தயா பூதேஷு**" என்றவிடத்தில் "ஸர்வபூதேஷு து:க்காஸஹிஷ்ணுத்வம் தயா" என்பது ஸ்வாமியின் ஸ்ரீஸூக்தி. ச்ருதப்ரகாசிகாசார்யர் அருளிச்செய்ததுமிங்ஙனேதான். இவ்வர்த்தத்தை பட்டர் ச்லோகபத்தமாக்கியருளினர் ஸ்ரீரங்கராஜஸ்தவ—உத்தரசதகத்தில்—***தயாந்யேஷாம் து:க்காப்ரஸஹநம்*** என்று. ஸஹிஷ்ணுத்வ—அஸஹிஷ்ணுத்வங்களை நாம் பொதுவாக விமர்சிப்போம். 'இவன் துக்கத்தை ஸஹித்துக்கொள்ளுகிறான்—இவன் துக்கத்தை ஸஹிக்கமாட்டுகிறிலன்' என்று இருவகையான உலகவழக்கையெடுத்துக்கொண்டு இரண்டிடத்திலும் என்ன அர்த்தம் தேறுகிறதென்று பார்க்கவேணும். துக்கத்தை ஸஹிக்கிறானென்றது—துக்கத்திற்குக் கரைகின்றிலன்—துக்கத்தைப் பொருள்படுத்துகின்றிலன் *ஸர்வம் ஸஹேமே ஸஹஜம் ஹி துக்கம்* என்று சொல்லிப் பொறுமையோடிருக்கிறான் என்றபடி. துக்கத்தை ஸஹிக்கமாட்டுகிறிலன் என்றால், அழுகிறான் அலற்றுகிறான் ஆடுகிறான் பாடுகிறான் ஓடுகிறான் துள்ளுகிறான் தவிக்கிறான் கத்துகிறான் கதறுகிறான் என்றபடி. இங்ஙனே யொழிய வேறுவிதமான அர்த்தம் ஜம்பூத்வீபத்தில் கிடையாது, த்வீபாந்தரத்திலும் இராது. இதைத் திடமாகக் கொண்மினுள்ளத்து.

20. மேலே காட்டின கீதாபாஷ்ய ஸ்தலத்தில் தாத்பர்ய சந்த்ரிகையில் ஸ்வாமீ ஸாதிக்கிறார் "**து:க்காஸஹிஷ்ணுத்வம்**—தந்நிராகரணேச்சேத்யர்த்த:" என்று. இதைப் போஷிக்கும்படியான வாக்கியம் அடுத்தபடி யாதொன்றுங் கிடையாது. பிறர்படும் துக்கத்தைக் கண்டு ஸஹித்திருக்க மாட்டாதவன் சக்தனாகில் தந்நிராகரணத்தில் முயல்கிறான்; அசக்தனாகில் தானும் துயருற்றுக்கிடக்கிறான்; என்பது தத்துவம். அஸஹிஷ்ணுதாகார்யமான நிராகரணேச்சையையும், தத்பூர்வஜமான அஸஹிஷ்ணுதை யையும் பர்யாயமாகச் சொல்லுவது ஸ்வாதந்த்ர்யகார்யமத்தனையன்றோ. இங்கு முக்கியமாகக் குறிக்கொள்ளத்தக்கது; கீதாபாஷ்யத்தில் ஸ்வாமி ஸாதித்தது எம்பெருமான் விஷயத்திலன்று; அங்கே *பவந்தி ஸம்பதம் தைவீம் அபிஜாதஸ்ய பாரத* என்று சொல்லித் தலைக்கட்டியிருக்கையாலே ஸாத்விகர்களின் சித்தவ்ருத்தியைப்பற்றிச் சொன்னது. ஆழ்வார் ஆஸுரப்ரக்ருதிகளின் தன்மையையும் தைவப்ரக்ருதிகளின் தன்மையையும் முறையே *நண்ணாதார் முறுவலிப்ப—நல்லுற்றார் கரைந்தேங்க* என்பவற்றால் வெளியிட்டருளினர். உலகில் தன்னுடைய உயிர் நண்பனொருவன் அரசனால் கொலை விதிக்கப்பட்டு மாண்டான் (அல்லது) தானே முடிந்தான் என்று கேள்விப்பட்ட வொருவன் துக்கத்தை ஸஹிக்கமாட்டிற்றிலன் என்றால் இங்கு அழுதலற்றுவது தவிர துக்க நிராகரணேச்சைக்கு ப்ரஸக்திலேசமேனுமுண்டோ?

21. தயையும் காருண்யமும் பர்யாயமென்பது நிர்விவாதம். ஸ்ரீராமாயணத்தில் *ருஷேர் தர்மாத்மநஸ் தஸ்ய காருண்யம் ஸமஜாயத* என்று வால்மீகி முனிவனுக்கு ஸர்வாத்மநா அபரிஹார்யமான விஷயத்தில் காருண்யமுண்டானதாகச் சொல்லிற்று. துக்க நிராகரணேச்சையுண்டானதாக அங்கு வாய் திறக்க முடியுமா? அடுத்தபடியாக *சோகார்த்தஸ்ய ப்ரவ்ருத்தோ மே ச்லோக:* என்றும் *சோக; ச்லோகத்வமாகத:* என்றும் முன் சொன்ன காருண்யமேயன்றோ சோக பதத்தினால் விவரிக்கப்பட்டது. தயாஸ்வரூபத்தை ஸ்வதந்திரமாக எப்படி நிரூபித்தாலும் கேள்வியில்லை; **அஸஹிஷ்ணுத்வம்**

என்கிற ஸ்வாமி ஸூக்திக்கு நிராகரணேச்சை என்று பொருள் பணிப்பது *பஹுவிதாமபி ஸம்பவதி ப்ரம:* என்கிற ஆளவந்தார் ஸ்ரீஸூக்தியைத்தானே நினைப்பூட்டி நிற்கும்.

22. ஆளவந்தாருடைய ஸ்தோத்ரரத்னத்தில் (56.) *க்ஷணேபி தே யத்விரஹ: அதிதுஸ்ஸஹ:* என்றவிடத்துத் தமது பாஷ்யத்தில்—"துஸ்ஸஹசப்தேந கேதோ ந விவக்ஷித:; ஸர்வசக்தே: ஹேயப்ரத்யநீகஸ்ய ததயோகாத்." என்றெழுதியுள்ளார். இது விசாரஸஹமாகுமா? 'கேதோ ந விவக்ஷித:' என்கிற நிஷேதபலத்தாலேயே கேதந்தான் சப்தார்த்தமென்று தேறிவிடவில்லையா? "தபச்சப்தேந காயக்லேசோ ந விவக்ஷித:" என்றால் தபச்சப்தத்துக்குக் காயக்லேசம் அர்த்தமன்று என்றதாகுமோ? நவிவக்ஷித மென்பதற்கும் நார்த்த: என்பதற்கும் நெடுவாசியுண்டென்பதை க்ராந்திகர்கள் நன்கறிவர். ஏவஞ்ச, 'துஸ்ஸஹசப்தேந கேதோ ந விவக்ஷித:' என்றவர்க்கு அஸஹிஷ்ணுதா சப்தார்த்தம் நன்கு தெரிந்துள்ளதென்னத் தட்டில்லை. அவிவக்ஷைக்குச் சொல்லுகிற காரணத்தை விமர்சிப்போம். **ஸர்வசக்தே:** என்பதும் **ஹேயப்ரத்யநீகஸ்ய** என்பதும் ஹேதுகர்ப்ப விசேஷணங்களாகையாலே ஸர்வசக்தத்வமும் ஹேயப்ரதிபடத்வமும் அவிவக்ஷாஹேதுக்களென்று தேறும். அதீதம் அநாகதம் என்று இருவகையான பக்ததுக்கங்களில் அநாகதத்தைப் பரிஹரிக்க சக்தியுண்டேயாகிலும் அதீதத்திற்கு சோகிப்பது தவிர பரிஹாரமில்லையே. ஸர்வசக்தித்வத்தைக் கொண்டு என்ன செய்ய முடியுமங்கு. இது பகவத் கதைகளில் அபரிமிதமாகக் காணத்தகும்.

23. வாலி மாண்ட பிறகு அழுத ஸுக்ரீவனைக் கட்டிக்கொண்டு அழுத பெருமாளைப்பற்றி *ஸஞ்ஜாதபாஷ்ப: பரவீரஹந்தா ராமோ முஹூர்த்தம் விமநா பபூவ* என்கிறார் வான்மீகிமுனிவர். *அஸமர்த்தம் விஜாநாதி மாமயம் மகராலய:* என்றும் *ஸர்வதா ஸுஸமர்த்தோஸ்மி* என்றும் சொன்ன பெருமாளாகையாலே அந்த ஸாமர்த்த்யாதிசயத்தைக் கொண்டு மாண்ட வாலியைப் பிழைப்பித்து ஸுக்ரீவனுடைய அழுகையை மாற்றிவிடலாகாதோ?

24. அவதாரங்களில் ஹர்ஷசோகங்களை ஸ்வார்த்தமென்றும் பரார்த்தமென்றும் இருவகையாகப் பிரித்து பட்டர் பகவத்குணதர்ப்பணத்திலே [**விகர்த்தா** என்கிற நாமபாஷ்யத்தில்] *ஸ்வார்த்த ஹர்ஷசோகாத்யபாவேபி பரார்த்ததத்ப்ரஸக்தி: அதோஷ:* என்றும் *அந்யதா பரது:க்கது:க்கித்வாதயோ குணா: கதமஸ்ய ஸ்யு:?* என்றுமருளிச் செய்திருக்க ஸ்ரீ ராமாயணத்தில் கண்ட சோகங்களெல்லாவற்றையுமே அபிநயமாக்கி விட்டால் ஸ்ரீ ராமாயணத்தில் எந்த இடத்தைக்கொண்டு குணாநுபவம் பண்ணி உய்வதாகத் திருவுள்ளமோ? இதைவிட அவதாரமே இந்த்ரஜாலமென்கிற வாதம் நன்றாகுமே. வரதராஜபஞ்சாசத்தில் *அந்த: கலேபரமிதம் ஸுஷிரம் ஸுஸூக்ஷ்மம் ஜாதம் கரீச! கதம் ஆதரணஸ்பதம் தே?* என்றபோது ஹேயப்ரத்யநீகத்வம் எங்குப் புக்கொளித்ததோ? *ஜந்ம கர்ம ச மே திவ்யம்* என்றவனுடைய கருமங்களில் ஜாரத்வ சோரத்வங்கள் தலை நிற்பவை; அவற்றிலும் ஹேயப்ரத்யநீக வார்த்தையைப் புகவிட்டு "ஜந்ம ச மித்த்யா, கர்ம ச மித்த்யா" என்று ப்ரவசனம் செய்வதொன்றே பாங்காகும்.

25. அலமிஹ விஸ்தரேண. அஸஹிஷ்ணுதா என்கிற பகவத் பாஷ்யகார ஸூக்திக்கு நிராகரணேச்சா என்று பொருள் விளக்கினது எம்பெருமானார் திருவுள்ளத்திற்கு புத்திபூர்வகமான கண்டனமேயாகும். "ஏதேந .....நிரஸ்தம்" என்கிற விவாத வாக்யம் அபுத்திபூர்வகமான [ப்ராமாதிகமான] கண்டனமானது இத்யலம். ...

## இப்போது கீதாபாஷ்ய ப்ரஸ்தாவம் மிகமிகவந்ததனால் அதிலிருந்தே நிதிபோன்ற சில அர்த்தவிசேஷங்களை நிரூபிக்கிறேன்.

26. சில பண்டிதர்கள் திரளுமிடத்தில் ஒரு ப்ரஸ்தாவம் நிகழ்வதுண்டு. (அதாவது) மணவாள மாமுனிகள் உபதேசரத்தினமாலையில் ''ஓராண்வழியா யுபதேசித்தார் முன்னோர்; ஏராரெதிராசரின்னருளால்—பாருலகில் ஆசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள்! கூறுமென்று, பேசி வரம்பறுத்தார்பின்'' என்கிற பாசுரத்தினால் ச்ரத்தாளுக்களுக்கு ரஹஸ்யார்த்தங்களை முன்னோர்களைப்போல் மறைத்திடாமல் தாராளமாக உபதேசிக்கும்படி எதிராசர் பலர்க்கும் நியமித்தருளினதாக ஸாதிக்கப்பட்டுள்ளது. ஆனால், இவ்வளவு விசாலஹ்ருதயம் படைத்த எம்பெருமானார் ரஹஸ்யார்த்தங்களை வெளியிட்டு ஒரு ரஹஸ்ய க்ரந்தமாவது ஸாதித்திருக்கலாகாதா? ஸ்வாமி தாமே ஸாதித்தருளியிருந்தால் பின்புள்ளார்க்கு அர்த்தங்களில் விவாதம் விளைய அவகாசமேயிராதே. ஸ்வாமி ஏன் வாளாவிருந்திட்டது? என்று பண்டிதர்கள் பேசிக்கொள்வதுண்டு; அப்போது சில பெரியார்கள் ஸாதிப்பதென்னவென்றால், ''ஸ்வாமி ஏன் ஸாதித்தருளவில்லை? ஸ்வாமி தாமே மணவாள மாமுனிகளாகத் திருக்கோலம் பூண்டது இதற்காகத்தானே'' என்று. அது வஸ்துஸ்திதியேயாயினும் அடியேன் ஒரு வார்த்தை விஜ்ஞாபிப்பது வழக்கம். கீதா பாஷ்யத்தை ஆழ்ந்து நோக்கினால் ஸகல ரஹஸ்யார்த்தங்களும் அதில் கையிலங்கு நெல்லிக்கனியாகக் காணலாமேயென்று. அடியேன் கீதாபாஷ்ய ஸாகரத்தில் அவகாஹித்துக் கண்டெடுத்த முத்துக்களில் சிலவற்றை ஈண்டு ஸமர்ப்பிக்கிறேன்.

27. கீதா பாஷ்யத்திற்கு தாத்பர்ய சந்திரிகையெனும் டீகை அமைந்தது தனிப்பட்டவோர் அதிசயம். ''தர்மோர்த்த இவ பூர்ணஸ்ரீ: அர்த்தோ தர்ம இவ த்வயி'' என்னுமாபோலே இந்த பாஷ்ய டீகைகள் இரண்டும் க்ஷீரமும் சர்க்கரையும்போலே சேர்ந்து ரஸிப்பித்து ரஸ்ய ரஹஸ்யார்த்தங்களைக் காத்தூட்டியிருக்கு மழகை என் சொல்லுவோம். ஸகல ரஹஸ்யார்த்தங்களையும் கீதாபாஷ்யமும் தாத்பர்ய சந்திரிகையும் ஸுபரிஷ்க்ருதமாக்கியிருக்கும்படியை ஸாரமாகவெடுத்து விஜ்ஞாபிக்கிறேன். சமதம விஷயம் மறக்கத்தக்கது. அது ஏதோ ப்ராமாதிகம்.

28. ரஹஸ்யார்த்த நிர்வாஹத்தில் மூன்று விஷயங்கள் உயிராகக்கொள்ளப் படுகின்றன.

(1) ஜீவாத்மாவுக்கு ஜ்ஞானாநந்தங்களைவிட சேஷத்வமே அந்தரங்க நிரூபகம்.

(2) ஸ்வகதஸ்வீகாரத்திற்காட்டிலும் பரகதஸ்வீகாரமே மிகச்சிறந்தது.

(3) சேதநனைப் பெறுவது எம்பெருமானுக்குப் புருஷார்த்தமேயொழிய, எம்பெருமானைப் பெறுவது சேதநனுக்குப் புருஷார்த்தமன்று.

இன்னும் சில விஷயங்களும் மருமமாக இருந்தாலும் இம்மூன்றும் முக்கியதமங்களாகக் கருதப்படுகின்றன. மற்றவையும் இவற்றுள் அந்தர்ப்பவிக்கும். ஆக இவ்வரிய பெரிய அர்த்த விசேஷங்களை ஸ்வாமி கீதாபாஷ்யத்தில் தெரியவைத்திருக்கும் படியை க்ரமேண உபபாதிக்கிறேன்.

29. பகவத் விஷயம் (ஈடு), ஸ்ரீவசநபூஷண வியாக்கியானம், குருபரம்பரா ப்ரபாவம் முதலான க்ரந்தங்களிலே காண்பதோரிதிஹாஸமாவது—''எம்பெருமானார்

உபயவேதாந்த ப்ரவசநம் நடத்தியருளா நிற்க 'ஆத்மாவுக்கு ஜ்ஞாநாநந்தங்களும் சேஷத்வமும் நிரூபகமாகச் சொல்லப்படாநின்றதே, இவற்றினுள் அந்தரங்க நிரூபகம் எது?' என்கிற ப்ரஸ்தாவம் திருவோலக்கத்திலே நிகழ, ஸ்வாமி ஸர்வஜ்ஞராயெழுந்தருளி யிருக்கச் செய்தேயும் இதனை ஆசார்யமுகேந வெளியிடுவிக்கவேணுமென்று திருவுள்ளம் பற்றி, திருக்கோட்டியூர்நம்பிபக்கலிலே சென்று ஸேவித்து இதனை யறிந்துவரும்படி ஆழ்வானை யனுப்பியருள, ஆழ்வானும் திருக்கோட்டியூருக்குச் சென்று நம்பி பக்கலிலே ஆறுமாஸம் காத்திருந்து *அடியேனுள்ளானுடலுள்ளான்* (8-8-2.) என்கிற திருவாய்மொழிப் பாசுரத் துணுக்கையைப் பெற்றுக்கொண்டு எம்பெருமானாரிடம் வந்து சேர்ந்து அதை விஜ்ஞாபிக்க, மஹாநிதியான இந்த ஸ்ரீஸூக்தியினுட்பொருளை ஸ்வாமி யெம்பெருமானார் திருவோலக்கத்திலே விவரித்தருளினார்." என்பதாகவுள்ளது.

30. அடியேனென்கிற சொல் நாலாயிர திவ்யப்ரபந்தத்தினுள் நூற்றுக்கணக்கான விடங்களிலுண்டு; நம்மாழ்வார் பாசுரம் பேசத் தொடங்கும்போதே 'அடியேன் செய்யும் விண்ணப்பமே' என்று அடியேன் சொல்லையிட்டே பேசுகிறார். இப்படி பல நூறிடங்களில் அடியேன்சொல் இருக்கவும் அவற்றையெல்லாம்விட்டுத் திருவாய்மொழியில் ஒரு மூலையிலிருக்கும் பாசுரத் துணுக்கொன்றைத் திருக்கோட்டியூர்நம்பி எடுத்துக் கொடுத்தனுப்பியிருக்கிறார்; அது எட்டாம்பத்தின் எட்டாம் பதிகத்தின் இரண்டாம் பாட்டிலுள்ளது. அங்கேயே முதற்பாட்டின் முடிவிலும் 'ஒருவனடியேனுள்ளானே' என்று அடியேன் சொல்லுள்ளது; அதையும் விட்டு அடுத்தபாட்டினடியை யெடுத்துக் காட்டியுள்ளார். இதில் என்ன விசேஷமென்பது நுண்ணுணர்வினர் நுண்மதிக்கே கோசரமாகக் கூடிய விஷயம். (கேண்மின்;) எந்த இடத்திலும் அடியேனென்கிற சொல்லுக்கு தேஹவிசிஷ்டனான ஆத்மாவே பொருளாகும். *அடியேன் செய்யும் விண்ணப்பமே* என்னுமிடத்தை யெடுத்துக்கொள்வோம்; தேஹமின்றிக்கே வெறும் ஆத்மா விண்ணப்பம் செய்ய முடியாதன்றோ. தேஹவிசிஷ்டனான ஆத்மாவே விண்ணப்பஞ்செய்ய முடியுமாதலால் இங்கு வெறும் ஆத்மாவை அர்த்தமாகக் கொள்வதற்கில்லை.

31. *அடியேன் சிறிய ஞானத்தன்* என்கிற மற்றோரிடத்தையும் (1-5-7.) எடுத்துக்கொள்வோம்; இங்கு 'ஞானத்தன்' என்று ஞானமுடைமை சொல்லியிருப்பதனால் அது தேஹத்திற்கு அஸம்பாவிதமாய் ஆத்மாவுக்கே ஸம்பாவிதமாகையாலே இங்கு அடியேனென்பது வெறும் ஆத்மாவையே சொல்லியாகவேண்டுமென்று சிலர் ப்ரமிக்கக் கூடும்; அப்படியில்லை; இங்கும் அடியேனென்கிற சொல், தேஹவிசிஷ்டனான ஆத்மாவையே சொல்லுகிறது; ஏனென்னில், "காண்பானலற்றுவன்' என்கிற க்ரியையிலே அச்சொல் அந்வயிக்கவேண்டும்; வெறும் ஆத்மா அலற்றமுடியாதாகையாலே அங்கும் தேஹவிசிஷ்டனான ஆத்மாவே அடியேன் சொல்லுக்கு அர்த்தமாகவேண்டியது அவசியமாயிற்று. இப்படி எந்தவிடத்திலும் தேஹவிசிஷ்டனான ஆத்மாவையே அடியேன்பதம் சொல்லி நிற்குமென்பது திண்ணமாயிற்று. *ஒண் சங்கதை வாளாழியானொருவனடியேனுள்ளானே* என்கிறவிடத்திலும் அப்படியே.

32. இனி *அடியேனுள்ளானுடலுள்ளான்* என்கிறவிடத்தில் மட்டும் அடியேனென்பதற்கு வெறும் ஆத்மாவே அர்த்தமாகவேண்டிய நிர்ப்பந்தமுள்ளது. ஆத்மாவுக்கு

விசேஷண பூதமான தேஹத்திற்கு வாசகமான சொல் உடலென்பது தனிப்பட இருப்பதனால் அடியேனில் தேஹத்தைச் சேர்த்து அர்த்தங்கொள்ளவேண்டிய அவச்யமில்லை; எம்பெருமான் ஜீவாத்மாவையும் உடல்பொருளையும் அநுப்ரவேசித்திருக்குமவன்' என்று சொல்ல வேண்டுவது இங்கு விவக்ஷிதம். உடலிலுள்ளானென்பதனால் ஜடப்பொருளை அநுப்ரவேசித்திருக்குமவன் என்பது சொல்லிற்றாயிற்று. 'ஜீவாத்மாவை அநுப்ரவேசித்திருக்குமவன்' என்று விவக்ஷிதமான பொருளுக்கு *அடியேனுள்ளானென்று வாசகமிடப்பட்டிருக்கிறது. ஆத்மா அஹமர்த்தமாகையாலே என்னுள்ளானென்று சொல்லியிருக்கலாம்; அப்போதும் ஆத்மாவிலுள்ளானென்னும் பொருள் தேறிவிடும். ஆனால் ஆழ்வார் அப்படி யருளிச்செய்யாமல் *அடியேனுள்ளானென்றருளிச் செய்திருக்கையாலே, ஆத்மாவென்றும் அடியேனென்றும் பர்யாயம்–(அதாவது) ஆத்மாவுக்கு சேஷத்வமே அந்தரங்க நிரூபகம்–என்பது ஆழ்வார் திருவுள்ளமாக அறுதியிடலாகிறது.

33. சிஷ்ய கோஷ்டியில் இப்படி எம்பெருமானார் நிர்ணயித்ததாகச் சொல்லுமைதிஹ்யம் உண்மையாயிருக்க வேண்டுமாகில் இது ஸ்வாமி திவ்யஸூக்திகளில் எங்கேயாவது ஏறியிருக்கவேணும். இல்லையாகில் இந்த ஐதிஹ்யத்திற்கு கௌரவமில்லை. ஸ்ரீ பாஷ்யத்தில் *ஜ்ஞோத ஏவ* என்கிற ஸூத்ரத்தின் விவரணத்தில் இது தெரிவிக்கப்படவில்லை. அங்கு "அயமாத்மா ஜ்ஞாத்ருஸ்வரூப ஏவ" என்று இவ்வளவே முடிவாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே மேலே விவரித்த ஐதிஹ்யம் யதார்த்தமாயிருக்கத் தகுதியில்லையென்று குருகுலவாஸ பாக்யமில்லாதார் சிலர் வலிதாகச் சொல்லுவதுண்டு. அன்னவர்களை "எண்ணாத மானிடத்தை எண்ணாத போதெல்லாமினியவாறே" என்கிற ரீதியில் விட்டிட்டு தத்வஜிஜ்ஞாஸுக்களான ஸுக்ருதிகளுக்கு அடியேன் பலகால் மருமமுணர்த்துவதுண்டு. மேலே காண்மின்.

34. இந்த மஹார்த்தம் ஸ்வாமி திருவுள்ளத்திலே நன்கு ஊறியிருந்து கீதாபாஷ்யத்தில் தகுந்த இடத்தில் வெளியிடப்பெற்றுள்ளது. கீதையில் (7-16.) *சதுர்விதா பஜந்தே மாம் ஜநாஸ் ஸுக்ருதிநோர்ஜுந!, ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ ச பரதர்ஷப!* என்றவிடத்தில் சங்கரபாஷ்யத்தை முன்னம் நோக்கிப் பிறகு ஸ்வாமி பாஷ்யத்தை நோக்கவேணும். "ஜ்ஞாநீ–விஷ்ணோஸ் தத்த்வவித்" என்றார் சங்கராசார்யர்; ஸ்வாமி அப்பொருளை ஒன்றாக எண்ணாது "பகவச் சேஷதைகரஸ ஆத்ம ஸ்வரூபவித் ஜ்ஞாநீ" என்று அருளிச்செய்தார். இப்படி ஓரிடமன்று. ஜ்ஞாநீ என வருமிடங்களிலெல்லாம் இங்ஙனேதானருளிச் செய்திருப்பது. ஜீவாத்மாவின் ஜ்ஞானத்திற்கு ப்ரயோஜனம் தன்னுடைய சேஷத்வத்தை யறிவதுதான் என்று ஸ்வாமியின் திருவுள்ளம் தேறுகிறது. ஆழ்வார் ஸ்ரீஸூக்தியில் அவகாஹநமில்லாமல் இங்ஙனே யருளிச்செய்ய இயலாதென்று அடியேன் அத்யவஸித்திருக்கின்றேன்.

35. இனி, ஸ்வகதஸ்வீகார பரகதஸ்வீகாரங்களைப்பற்றி ஸ்வாமி தெளிவு பெறுத்தியிருக்கும்படியை விஜ்ஞாபிக்கிறேன். சேதநன் தான் எம்பெருமானைப் பற்றுவதானது ஸ்வகத ஸ்வீகாரமென்றும், எம்பெருமான் தானே சேதநனை வரிப்பதானது பரகத ஸ்வீகாரமென்றும் சொல்லப்படுகிறது. அடைவே மர்க்கடகிசோர ந்யாயமென்றும் மார்ஜாரகிசோர ந்யாயமென்றும் வழங்குவர். பரகத ஸ்வீகாரமென்பதன் சுவையை

அறியப்பெருதவர்கள் இது 'அஸம்பிரதாயப் பேச்சு' என்பர் அது கிடக்க. கீதா பாஷ்யத்தில் ஸ்வாமி தெளிவித்தருளின மஹார்த்தம் இது. அதில் எட்டாவது அத்யாயத்தில் பதினான்காவது ச்லோகம். "அநந்யசேதாஸ் ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யச:, தஸ்யாஹம் ஸுலப: பார்த்த! நித்யயுக்தஸ்ய யோகிந:" என்பது. *ஜ்ஞாநீது ஆத்மைவ மே மதம்* என்று பகவான் தான் தனக்கு உயிர்நிலையாகக் கொண்டாடும் ஞானியானவன் தன்னை உபாஸிக்க வேண்டியபடியையும் பேறுபெறும் பரிசையும் இனியருளிச் செய்கிருன் கண்ணபிரான்—என்று அவதாரிகையிட்டு சுலோகத்தை வெகு அழகாக வியாக்யானித் தருளியிருப்பது ஸ்ரீ ராமாநுஜ பாஷ்யமொன்றில் தான். இந்த சுலோகத்தின் கருத்து என்னவென்ருல், அர்ஜுநா! எவன் இடைவிடாமல் எப்போதும் வேருென்றிலும் நெஞ்சைச் செலுத்தாதவனுய் என்னையே ஸ்மரிக்கிருனே, என்னேடு நித்யஸம்ச்லேஷத்தை விரும்பியிருக்கின்ற அந்த பக்தனுக்கு நான் ஸுலபன்—என்பதேயாம்.

36. இதில் (தஸ்யாஹம் ஸுலப:) அவனுக்கு நான் எளியன் என்கிற பகுதிக்கு ஸ்வாமி பாஷ்யம் செய்தருளியிருக்கும் பரிசு அற்புதமானது. பாஷ்யபங்க்திகள் வருமாறு:-

**"தஸ்ய நித்யயுக்தஸ்ய-நித்யயோகம் காங்க்ஷமாணஸ்ய யோகிந:. அஹம் ஸுலப:- அஹமேவ ப்ராப்ய:,ந மத்பாவ ஐச்வர்யாதிக:-ஸுப்ராபச் ச. நத்வியோகம் அஸஹமாந: அஹமேவ தம் வ்ருணே. மத்ப்ராப்த்யநுகுண-உபாஸநவிபாகம் தத்விரோதி நிரஸநம் அத்யர்த்த மத்ப்ரியத்வாதிகஞ்ச அஹமேவ ததாமி இத்யர்த்த:. *ய மேவைஷ வ்ருணுதே தேந லப்ய:* இதிஹி ச்ரூயதே. வக்ஷ்யதே ச *தேஷாம் ஸதத யுக்தாநாம் பஜதாம் ப்ரீதிபூர்வகம். ததாமி புத்தியோகம் தம் யேந மாமுபயாந்தி தே. தேஷா மேவாநுகம்பார்த்தம் அஹமஜ்ஞாநஜம் தம:. நாசயாம்யாத்மபாவஸ்தோ ஜ்ஞாநதீபேந பாஸ்வதா* இதி.**

இவ்வளவும் கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்திகள். இவற்றின் பொருளாவது—என்னேடு எப்போதும் கூடியிருக்கவேணுமென்கிற விருப்பமுடையவனுக்கு அடையத் தகுந்தவன் நானேயாகிறேன். மிக எளிதாக அடையத் தகுந்தவனுமாகிறேன் நான்; (அதாவது) அவனுடைய பிரிவைப் பொறுக்கமாட்டாதவனுய் (அவனைப் பிரிந்து தரித்திருக்கமாட்டாதவனுய்) நானே அவனை வரிக்கிறேன். என்னையடைவதற்கான உபாஸனத்தின் பரிபக்குவ நிலைமையையும் அதற்குற்ற இடையூறுகள் நீங்குதலையும் என்னிடத்தில் அதிகமான ப்ரீதி முதலியவைகளையும் நானே கொடுக்கிறேன். ***நாயமாத்மா** ச்ருதியில் இவ்வர்த்தம் ப்ரஸித்தமாயிருப்பதோடு இந்த கீதையிலேயே மேலே பத்தாவது அத்யாயத்தில் 10, 11 ச்லோகங்களாலும் சொல்லப்படுகிறது என்பதாம். ஸத்ஸம்பிரதாய ஸாரார்த்தம் இங்கே பொதிந்திருக்குமழகை இனி உபபாதிக்கிறேன்.

37 ஸ்ரீவசநபூஷணத்தில் 142 "இவன் அவனைப்பெற நினைக்கும்போது பாதகமும். விலக்கன்று" என்று அருளிச் செய்தவிடத்தில் வியாக்யானத்தில் மணவாளமாமுனிகள்— "உடைமையை உடையவன் சென்று கைக்கொள்ளுமாபோலே ஸ்வாமியான அவன் தானே வந்து அங்கீகரிக்கக் கண்டிருக்கக்கடவ பரதந்திரனை இச்சேதநனானவன் தான் பலியாய் தன் ஸ்வீகாரத்தாலே ஸ்வதந்த்ரனை அவனைப்பெற நினைக்குமளவில் அவன் நினைவு கூடாதாகில் இப்படி விலக்ஷணையாயிருக்கிற ப்ரபத்தியும் தல்லாபஸாதனமாகாதென்றபடி ஸ்வாமியாய் ஸ்வதந்த்ரனை அவன் ஸ்வம்மாய் பரதந்த்ரனுயிருக்கிற இவனை ஸ்வேச்சை

யாலே பெற நினைக்குமளவில் பாதகமும் ப்ரதிபந்தகமாகமாட்டாதென்கை. இவை யிரண்டாலும் ஸ்வகதஸ்வீகாராநுபாயத்வமும் பரகதஸ்வீகாரோபாயத்வமும் காட்டப் பட்டது.'' என்றருளிச் செய்திருக்கும் ஸ்ரீஸூக்திகள் மேலே காட்டிய கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்திகளையே அடியாகக் கொண்டவையென்று நன்கு புலப்படுகின்றன. (மணவாள மாமுனிகள்) தாம் முன்பு ஒருவேஷத்தாலே கீதா பாஷ்யத்தில் வடமொழியாலே அருளிச் செய்ததை பின்பு மற்றொரு வேஷத்தாலே ஸ்ரீவசநபூஷண வியாக்யானத்தில் தென்மொழி யாலே அருளிச் செய்தாரென்று அறுதியிடத் தட்டில்லை.

38. மேலே உதாஹரித்த கீதா பாஷ்ய ஸ்ரீஸூக்தியில் ஒவ்வொரு வாக்கியமும் ஸாரமானது. **(*தத்வியோகம் அஸஹமாந: அஹமேவ தம் வ்ருணே*)** ஞானியான சேதநனைப் பிரிந்திருப்பதை எம்பெருமான் தான் பொறுத்திருக்கமாட்டாதவனுய்த்தானே அந்த சேதநனை வரிப்பதாகக் கூறுகின்றவிதுதான் பரகத ஸ்வீகாரமென்பது. **(*மத்ப்ராப்த்யநுகுணோபாஸந விபாகம் அஹமேவ ததாமீத்யர்த்த:)** என்கிற இந்த வாக்கிய மானது ஸ்வகதஸ்வீகாரப் பற்றுசை நன்றாகக் கழிக்கிறது. இத்தலையில் விளைவதெல்லாம் எம்பெருமானுடைய க்ருஷிபலமாக விளைகின்றதேயன்றி இவன் தலையாலே விளைவித்துக் கொள்ளுமது ஒன்றுமில்லையென்கிற ஸத்ஸம்ப்ரதாய ஸாரார்த்தம் தெளிவிக்கப்பட்டது. இந்த இடத்தில் ***நாயமாத்மா ச்ருதியையும்** எடுத்துக்காட்டியருளின ஸ்வாமி பரகதஸ்வீ காரத்திற்கு அதுவே ப்ரமாணமென்று நிரூபிக்கிறமுகத்தாலே பிறருடைய குத்ஸிதவாதங் களையும் அகற்றினுராயிற்று. இவ்விடத்தில் தாத்பர்ய சந்த்ரிகையில் தேசிகன் அருளிச் செய்துள்ள திவ்யஸூக்திகளும் தெள்ளியவே. **''உக்தஸ்ய அதிவாத மாத்ரத்வசங்காவ்யுதா ஸாய ச்ருதிமூலதாமாஹ *ய** மேவேதி. என்றருளிச் செய்திருப்பது ஆழ்ந்து நோக்கத்தக்கது.

39. இவ்விஷயத்தில் ஸாரமாகத் தெரிந்துகொள்ளவேண்டியது இவ்வளவே; *த்வத்பாதமூலம் சரணம் ப்ரபத்யே* என்றும் *புகலொன்றில்லாவடியேன் உன்னடிக் கீழமர்ந்து புகுந்தேனே* என்றும் சொல்லிக்கொண்டு (அதாவது, நாம் பற்றுகிறோமாகக் காட்டிக்கொண்டு) திருவடிகளிலே விழுந்தாலும், 'இது நாம் பற்றின பற்றன்று; எம்பெருமான் தானே பற்றுவித்தானத்தனை; அவனுடைய க்ருஷி பலித்தததத்தனை' என்று உள்ளூற அநுஸந்திக்க ப்ராப்தம். இதையிட்டே பரகத ஸ்வீகாரமென்கிறது.

40. **நாயமாத்மாச்ருதியின்** பொருளில் இற்றைக்கும் தெளிவில்லாமேயிருப்பார் பலருளர். அன்னவர்கட்கு நற்றெளிவைப் பிறப்பிக்கவே இந்த கெட்டம் அமைந்தது. இங்கே ஸ்வாமி ஸாதித்தது தீபம் போன்றது. வேதாந்தவாசிரியர் ஸாதித்தது ப்ரதீபம் போன்றது. தீபாதுத்பந்ந ப்ரதீபமென்பர்களே, இது இங்கு மிகத்தகும். ''உக்தார்த்தே ப்ரமாணம் தர்சயதி ***யமேவேதி**'' என்று ஸாதிக்கலாமாயிருக்க, அங்ஙனம் ஸாதித் தருளாமல் ''உக்தஸ்ய அதிவாதமாத்ரத்வ சங்காவ்யுதாஸாய ச்ருதிமூலதாமாஹ— **யமேவேதி.**'' என்று (தாத்பரிய சந்திரிகையில்) ஸாதித்திருப்பதை நோக்குமளவில் இந்த பரகதஸ்வீகாரபக்ஷத்தை அதிவாதமென்று அக்காலத்தில் சிலரோ பலரோ சங்கித்துக் கொண்டிருந்தார்களென்பது தெரியவருகின்றதன்றே. அது யதார்த்த வாதமேயொழிய அதிவாதமன்று என்று விளக்கியுங்கூட, இன்னமும் இதை அதிவாதமென்றே சொல்லி வருகிறார்களந்தோ!

41. இனி, சேதநலாபம் ஈச்வரனுக்கே பேறு என்னும் பரம ரஹஸ்யார்த்தத்தில் ஸ்வாமி காட்டியருளியிருக்கும் தெளிவை உபபாதிக்கிறேன். "ப்ரஹ்மவித் ஆப்நோதி பரம்" இத்யாதி சாஸ்த்ரங்களை மேலெழப் பார்க்கும்போது 'ஈச்வரனை அடைவது சேதநனுக்குப்பேறு' என்பதாகவே தோற்றி நிற்கும். ஈச்வரனை ப்ராப்யனென்றும், சேதநனை ப்ராப்தாவென்றும் ஸ்பஷ்டமாகப் பலவிடங்களிலும் சொல்லியிருக்கையாலே 'ஈச்வர லாபம் சேதநனுக்குப் புருஷார்த்தம்' என்றே க்ரஹிக்க நேரும். பிறர் இப்படியே மதமாகக் கொண்டிருக்கிறார்கள். "ஈச்வரனுக்கு சேதநலாபம் புருஷார்த்தம்" என்பது ஸ்வாமியின் ஸித்தாந்த ஸாரம். இதை நன்கு கண்டறிந்த தேசிகனுடைய திருவுள்ளமும் சேதநலாபம் ஈச்வரனுக்குப் பேறு என்பதேயாம். இதனை அவர் கீதாதாத்பர்ய சந்த்ரிகையில் வெகு அழகாகக் காட்டியுள்ளார். கீதையில் ஒன்பதாமத்யாயத்தின் முடிவிலுள்ள ***மந்மநா பவ*** என்கிற ச்லோகத்தின் பாஷ்யத்திற்கு விவரணமெழுதுகையில்—"**ஆச்ரித ஸம்ரக்ஷணம் ஸ்வலாபம் மத்வா ப்ரவர்த்ததே**" என்றருளியிருப்பது ஸாரமானது. "ப்ராப்தாவும் ப்ராபகனும் ப்ராப்திக்கு உகப்பானும் அவனே" என்பது ஸ்ரீவசநபூஷண ஸ்ரீஸூக்தி. சேதநனைப் பெறுவது ஈச்வரனுக்குப் பேறு என்றால் இவ்வர்த்தம் ஹ்ருதயத்தில் அவகாஹிப்பது சிரமமேயாகும். ஆனாலும் உண்மையான ஸ்ரீ பாஷ்யாதிகாரிகளுக்கு இதுதான் ராஜமார்க்கமாகத் தோன்றும்.

42. ஸ்ரீபாஷ்யத்தின் முடிவில் *அநாவ்ருத்திஸூத்ரபாஷ்யத்தில் "**நச பரமபுருஷஸ் ஸத்ய ஸங்கல்ப: அத்யர்த்தப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா கதாசித் ஆவர்த்தயிஷ்யத்**" என்கிற ஸ்ரீஸூக்தியினால் 'சேதநலாபமே ஈச்வரனுக்குப் பேறு' என்கிற ஸத்ஸம்ப்ரதாய ரஸ்ய ரஹஸ்யப்பொருளை ஸ்தாபித்தருளினர். அங்கே விஷயம் என்னவென்றால், மோக்ஷத்திற்குச் சென்ற சேதநன் திரும்பிவருதல் உண்டா இல்லையா? என்று விசாரம் வந்தது. ஈச்வரன் கேட்பாரற்ற ஸ்வதந்திரனாதலால் அந்த ஸ்வாதந்திரியத்தினால் முக்தாத்மாவைத் திருப்பியனுப்பிவிடக் கூடுமன்றோ என்கிற சங்கையுண்டாக, ஸூத்ரகாரர் "அநாவ்ருத்திச் சப்தாத்" என்று ஸூத்ரமியற்றினர். முக்தாத்மா ஒருநாளும் திரும்பிவருவதில்லையென்று சாஸ்த்ரம் முறையிட்டிருக்கையாலே புநராவ்ருத்தி கிடையாதென்று ஸூத்ரகாரர் சொல்லிவிட்டார். ஸ்வாமி இவ்வர்த்தத்தை வியாக்கியானித்தருளி ஈச்வரன் ஸ்வதந்திரனாகையாலே கேட்பாரற்று முக்தாத்மாவை மீண்டும் கீழே தள்ளிவிட நினைத்தால் என் செய்வது? என்கிற சங்கையின்மீது, 'தள்ளமாட்டானென்று சாஸ்த்ரம் சொல்லியிருக்கையாலே' என்று விடை கூறினதால் என்ன ஸமாதானம் வந்ததாகும். சாஸ்த்ரத்தையும் மீறிச் செய்வதன்றோ ஸ்வதந்த்ரக்ருத்யம். அப்படிப்பட்ட ஸ்வாதந்திரியத்தாலே ஈச்வரன் ஒன்று செய்யப்புகுந்தால் சாஸ்த்ரம் குறுக்கே நிற்குமோ? என்பதன்றோ இங்குப் பூர்வபக்ஷியின் கருத்து. அதற்குத் தினவடங்கச் சொல்லவேண்டிய ஸமாதானத்தை ஸூத்ரகாரர் சொல்லாத குறைதீர—சங்கராசாரியரும் சொல்லாத குறைதீர ஸ்வாமி வெகு அழகாக அருளிச்செய்தார்.

43. ஈச்வரன் ஸ்வதந்திரனேயானாலும் உன்மத்தனல்லன், மூர்க்கனல்லன், அரஸிகனல்லன், ஸத்யஸங்கல்பனென்று பேர்பெற்றவன். தன்னுடைய மனோரதத்திற்கு மாறுபாடாக நடந்துகொள்பவனல்லன். ஒரு சேதநனைப் பெறுவதற்கு அவன் என்னபாடு படுகிறான்? அவன் ஸ்ருஷ்டி பண்ணுவதும் அவதாரங்கள் பண்ணுவதும் சேதநரை

லபிக்கைக்காகவன்றோ? எவ்வளவோ தவப்பயனாக ஒரு சேதநனை லபித்த பின்பும் ரஸிகனான பரம புருஷன் அவனை இழப்பனோ?—என்று இவ்வளவுமெழுதி சங்காபரிஹாரத்தைத் தலைக்கட்டியுள்ளார். இதில் "பரம புருஷ: ஜ்ஞாநிநம் லப்த்வா" என்கிற ஸ்ரீஸூக்திவிந்யாஸமானது ஸ்வாமி திருவுள்ளத்தில் திருவாய்மொழி யமுதக்கடல் அலையெறிகிறபடியை நன்கு காட்டுகிறது. கீதையில் "ஸ மஹாத்மா ஸுதுர்லப:" என்று எம்பெருமான் தானே சோதி வாய்திறந்து பணித்ததையும் உடனே உதாஹரித்தருளினர். *எல்லாம் கண்ணனென்றிருக்கிற மஹாத்மா மிகவும் துர்லபன் என்று பகவான் தன் திருவாக்காலே சொன்னால், அப்படிப்பட்டவொரு மா ஞானியை லபிக்கைக்கு அவன் எவ்வளவோ பாடுபடுகிறவன் என்பது விளங்கவில்லையா? ஆகவே சேதந லாபமே ஈச்வரனுக்குப் பேறு என்கிற ஸித்தாந்தம் ஸ்ரீ பாஷ்ய திவ்ய ஸூக்தியில் நன்கு பொலிந்ததாயிற்று. ஆகில், யத்கிஞ்சித்ஸுக்ருதகரணம், பேற்றுக்கு த்வரிக்கை இவையெல்லாம் நம் பக்கலில் அடியோடு வேண்டாவோ என்று பிறர் க்ஷேபிக்கவருவர்கள். சைதந்ய கார்யமாக விளையுமவை நம்மால் தடுக்கவொண்ணாதவை. அவையுங்கூட நம்மால் விளைவனவல்ல என்பதை வேதாந்தவாசிரியரே "நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாண நிபுண:" என்கிற ஸ்ரீஸூக்தியினால் திண்மை பெறுத்தினர். சொத்தைப் பெற்று அனுபவித்து ஆநந்திக்கவேணுமென்கிற ஆவல் ஸ்வாமிக்கே உரியதாகவும் உள்ளதாகவும் உலகிற் காண்கிறோமாதலால் இந்த நியாயமேயாகும் இங்கும். ஆனால் ஜீவாத்மாவாகிற இந்த சொத்து சைதந்யமாகிற கல்மஷத்தோடும் கூடியிருக்கையாலே சிறிது தலையாட்டவும் வாலாட்டவும் பெறுகிறது. தன்னை நன்றாக வுணரும்போது தலைமடிந்து நிற்கிறது. நிலாத் தென்றல் சந்தனம் புஷ்பம் முதலியன போலே ஸர்வாத்மநா பரதந்திரமாயிருக்க வேண்டிய ஜீவாத்மாவுக்கு சைதந்யமே இடையூறாக நிற்றலால் இதைக் கல்மஷமென்கிறதென்று நம் ஆசாரியர்கள் நிலையிட்டருளினார்கள்.

44. சரமஸூத்ர ஸ்ரீ பாஷ்யத்தில் "நச பரமபுருஷ: உபஸ்திதம் ஜ்ஞாநிநம் கதாசித் ஆவர்த்தயிஷ்யதி" என்று அருளிச்செய்யலாமாயிருக்க, அங்ஙனமருளிச் செய்யாது "ஜ்ஞாநிநம் லப்த்வா" என்றதும் அந்த ஞானிக்கு அத்யர்த்தப்ரியமென்று விசேஷணமிட்டதும் நெஞ்சால் நினைப்பரிதன்றோ. *வாரிக்கொண்டுன்னை விழுங்குவன் காணிலென்று, ஆர்வுற்ற என்னையொழிய என்னின்முன்னம் பாரித்து, தானென்னை முற்றப் பருகினான்* என்ற திருவாய்மொழியையன்றோ பாஷ்யகாரர் நிச்சலும் சிந்தைசெய்திருந்தார். கீதாசார்யன் *ஸ மஹாத்மா ஸுதுர்லப:* என்றதை பாஷ்யகாரர் ஸம்வாத ப்ரமாணமாக எடுத்துக்காட்டியது இங்கு ஸாரதமம். எம்பெருமான் அந்த அதிகாரியை லபிக்க எவ்வளவோ ப்ரயாஸப்படுவனென்பது நன்கு விளங்கவில்லையா? இல்லையாகில் "வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா விசிஷ்யதே" என்றன்றோ சுலோகமிட்டிருப்பன். அங்ஙனன்றிக்கே ஸுதுர்லப: என்றது ஆழ்ந்த கருத்தையுடையதன்றோ. ...

## கீழ் ஆருவது பக்கத்தில் வெளியிட்ட ஸ்ரீமத் எம்பார் ஜீயர்ஸ்வாமியின் ஸ்ரீமுகத்திற்கு விடை விண்ணப்பம்

45. சிவபெருமான் ஸ்ரீ மஹாவிஷ்ணுவினிடத்திலே எப்படிப்பட்ட ப்ரதிபத்தியையுடையவர் என்பதை முன்னம் தெளிந்துகொள்ளவேண்டும். இதற்குப் பல வழிகளுண்டு, எல்லாருமறிந்த ஒரு வழியை முன்னம் நினைப்பூட்டுவோம். ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில்

'பார்வத்யுவாச' என்று பார்வதியின் கேள்வியாக ஒரு ச்லோகமும், 'ஈச்வர உவாச' என்று பரமசிவனுடைய பதில் வார்த்தையாக வொரு ச்லோகமும் உலகமெல்லாம் சொல்லி வருவது அபலபிக்க முடியாதது. பார்வதியின் கேள்வி யென்னவென்றால், "கேநோபாயேந லகுநா விஷ்ணோர் நாமஸஹஸ்ரகம், பட்யதே பண்டிதைர் நித்யம் ச்ரோது மிச்சாம்யஹம் ப்ரபோ!—சிறியதோருபாயத்தாலே விஷ்ணுவின் ஆயிரந் திருநாமங்களையும் சொன்னதாக ஆவதற்கு வழியுண்டோ?" என்று கேட்டாள் பார்வதி. அதற்குப் பரமசிவன் "ஸ்ரீராமராம ராமேதி ரமே ராமே மநோரமே, ஸஹஸ்ரநாமதத்துல்யம் ராமநாம வராநநே." என்று பதில் சொன்னதாகவுள்ளது, ராமநாமத்தைச் சொன்னால் ஸஹஸ்ரநாமஞ் சொன்னதாக ஆய்விடுமென்றும், நானும் அந்த ராமநாம ஸங்கீர்த்தனத்தில்தான் ரமித்திருக்கிறே னென்றும் சிவபெருமானுடைய பதில் வார்த்தை. 'பார்வதி! என் பேரைச் சொன்னால் ஸஹஸ்ரநாமம் சொன்னதாக ஆய்விடும்' என்று சிவபெருமான் சொல்லவில்லை. அப்படிச் சொன்னால் பரதேவதாத்ரோஹ பாதகம் தனக்கு ஏற்படுமென்று அஞ்சியே அவர் அப்படிச் சொல்லவில்லை. உலகில் அவரவர்கள் தம் தம் மனைவிகளிடத்தில் தங்கள் பெருமைகளைப் பேசிக்கொள்வதுண்டு; அப்படி இவரும் பேசுவரோ வென்று பரீக்ஷிப் பதற்காகவே பார்வதி தன் பர்த்தாவை நோக்கி இக்கேள்வி கேட்டது. அந்தப் பரீக்ஷையில் பரமசிவன் ஏமாந்துபோகாமல்—தனக்கில்லாத பெருமையைத் தான் பேசிக்கொள்ள முன்வரமாட்டாமல் உண்மையான விடையை விடுத்தார்.

46. அந்த ஸ்ரீராமன் யாவனென்று தெரிந்துகொள்ளவேண்டியது அவசியமல்லவா? இவ்வுண்மையைத் தெரிவிப்பதில் ஸ்ரீ ராமாயணமே ஸமர்த்தமானது. அதில் பலபல ச்லோகங்களிருந்தாலும் இங்கு நாம் சிற்சில ச்லோகங்களையே உதாஹரிக்க விரும்புகிறோம். அதில் அயோத்யா காண்டத்தின் உபக்ரமத்தில் "ஸ ஹி தேவை ருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி:, அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ் ஸநாதன:". என்று, ஸ்ரீ மஹாவிஷ்ணுவே ஸ்ரீராமனாயவதரித்ததாக ஸ்பஷ்டமாய்ச் சொல்லப்பட்டது. ஆரம்பத்தில் "ஏதஸ்மிந்நந்தரே விஷ்ணுருபயாதோ மஹாத்யுதி:" என்றதும், ராவண வதத்திற்குப் பிறகு தேவதைகளெல்லாரும் திரண்டுருண்டு வந்து "பவாந் நாராயணோ தேவ: என்றதும் காண்க. அந்த தேவதா ஸமூஹத்தில் முக்கண்ணப்பனும் சேர்ந்திருந்ததை வான்மீகி முனிவர் "த்ர்யக்ஷ நயன: ஸ்ரீமாந்" என்று கண்ணையிட்டுக் காட்டிவைத்தார். இது தவிர முக்கியமாக நோக்கத்தக்கதொன்றுண்டு. லங்காபுரியில் ராவணாதிகளுக்கு முன்பு குடி வாழ்ந்த மாலி சுமாலி மால்யவான்களை வதைக்க வழி தேடின தேவர்கள் முதலில் சிவபெருமானைச் சரணமடைந்து வேண்டிக்கொண்டதாகவும் அப்பெருமான் 'இது என்னாலாவதன்று; சங்க சக்ர கதாபாணியான ஸ்ரீமந் நாராயணனே இவர்களை வதைக்க வல்லவன்' என்று சொன்னதாகவும், பிறகு அவர்கள் ஸ்ரீமந் நாராயணனை அடைந்து வேண்டி அபயம் பெற்றதாகவும் உத்தர ஸ்ரீ ராமாயணத்தில் ஆறுவது ஸர்க்கத்தில் கூறப்பட்டிருக்கின்றது. இப்படியுள்ள பல இதிஹாஸங்களினால் சிவபெருமான் விஷ்ணு பகவானைப் பரதேவதையாகக் கொண்டிருந்தபடியால்தான் அந்த விஷ்ணுவின் அவதாரமான ஸ்ரீ ராமனிடத்திலேயே தான் ரமிப்பதாகவும் தன் தேவிக்கும் அதை உபதேசிப்பதாகவும் யதார்த்தமான விடை அமைந்திருக்கின்றது.

47. இதிஹாஸ புராணங்களில் கதைகள் கிடக்கட்டும்; வேதத்தில் விஷ்ணுவைப் பற்றின மதிப்பு எப்படிப்பட்டதென்பதை வைதிகர்கள் உள்ளபடி தெரிந்துகொள்ள வேண்டும். வேதத்தில் ப்ரஸ்தாவிக்கப்படாத தேவதை கிடையாது. எல்லாத் தெய்வங்

களும் ப்ரஸ்தாவிக்கப்பட்டு ஒவ்வொரு தெய்வத்தைப் பற்றியும் பலபல கதைகள் ஓதப்பட்டிருக்கின்றனவென்பதை வைதிகர்கள் அறிவர்கள். அக்நி, இந்திரன், ப்ருஹஸ்பதி, மித்ராவருணர், ருத்திர பகவான் இத்யாதி தேவர்களைப்பற்றிக் கதைகள் சொல்லப்படுவது போலவே விஷ்ணுவைப்பற்றியும் சொல்லப்பட்டிருக்கின்றது. அக்நி முதல் ருத்ர பகவான் வரையிலுமுள்ள தேவதைகளைப்பற்றிச் சொல்லப்படும் கதைகளையும் விஷ்ணுவைப்பற்றிச் சொல்லப்படும் கதையையும் ஊன்றிப் பார்க்கவேணும். விஷ்ணு தவிர மற்ற தேவதைகளிடத்திலே வந்து 'எங்களுக்கு இன்ன காரியம் செய்துதரவேணும்' என்று யாரேனும் சிலர் வேண்டினால் உடனே அந்த தேவதைகள் என்ன பதில் சொல்லுவது வழக்கமென்றால் 'வரம் வ்ருணீ' என்றே 'வரம் வ்ருணுமஹை' என்றே சொல்லி "நான் இன்ன வரம் விரும்புகிறேன்; இதை எனக்குக் கிடைக்கச் செய்தால் உங்களுக்கு நான் காரியம் செய்கிறேன்" என்று சொல்லி வரம் பெற்றுக்கொண்டே காரியஞ் செய்வது வழக்கம், விஷ்ணுவிடம் வந்து கார்யாபேக்ஷை பண்ணும்போது அவர் இப்படி பல்லைக்காட்டி வரம் கேட்டதாக ஓரிடத்திலும் கிடையாது. இது நாம் ஸாமான்யமாக எழுதிவிடுவதன்று; "வரம் வ்ருணீ—வ்ருணவஹை, வ்ருணுமஹை" என்று நமது யஜுர்வேதத்தில் எத்தனையிடங்களில் வருகின்றதோ; அத்தனையிடங்களையும் ஸ்ரீ மஹாவிஷ்ணு ஸாம்ராஜ்யத்தில் எடுத்துக்காட்டியுள்ளோம். குறையுள்ளவர்களே வரம் கேட்பவர்களென்பதையும், வரம் கேளாதவர்கள் அவாப்த ஸமஸ்தகாமர்களென்பதையும் நாம் சொல்லவேணுமோ? எங்கேனும் ஓரிடத்திலாவது விஷ்ணுவின் வாக்கில் 'வரம் வ்ருணீ' என்கிற வாக்கியம் வெளிவந்திருப்பதாகக் காட்டிவிட்டால் 'மற்ற தெய்வங்களைப்போலே அவரும் குறைவாளரேயொழிய அவாப்த ஸமஸ்தகாமரல்லர்' என்று நாம் இசையத் தடையில்லை. வரம் கேட்பதில் அக்நி முதல் ருத்ர பகவான் வரையில் ஒரே வகுப்புத்தான் என்பதையும், இந்த வகுப்பில் விஷ்ணு ஒருவரே சேராதவரென்பதையும் வைதிகர்கள் நிஷ்கர்ஷித்துவிட்டால் பரதேவதா நிஷ்கர்ஷம் எளிதில் முடிந்ததாகும். வீணான அபிமானத்தைவிட்டு ப்ரமாணகதியை நோக்கவேணும்.

48. பகவத்கீதை பதினோராமத்யாயத்தில் விச்வரூபப்ரதர்சநம் அமைந்திருப்பது இதர தேவதைகளின் அவரத்வத்தைக் கையிலங்கு நெல்லிக்கனியாகக் காட்டுவதற்காகவே. அதில் அர்ஜுநன் மூன்றாவது ச்லோகத்தில் "நீயே பரமேச்வரனென்பது வாஸ்தவமே; ஆனாலும் அதை நான் ஸாக்ஷாத்கரிக்க விரும்புவதால் உன்னுடைய வைஷ்ணவ ரூபத்தைக் காட்டலாமோ?" என்று விரும்ப, தன் திருமேனியின் ஏகதேசத்திலே யொடுங்கிக் கிடக்கிற ஸகல தேவதைகளையும் காணுயென்று காட்டிக்கொடுத்தான் ஸ்ரீமந்நாராயணன்; திவ்யசக்ஷுஸ்ஸைப் பெற்று அதுகண்ட அர்ஜுனன் "பச்யாமி தேவாந் தவ தேவ! தேஹே" என்று தொடங்கி விதி சிவ பாவகாதி ஸகல தேவதைகளையும் வாஸுதேவனுடைய தேஹத்திலே தான் காண்பதாகக் கூறினன். இதை இந்திரஜாலமென்று கூறிற்றிலனாகையாலே அத்வைதவாதம் அடியற்றது. தேவதாந்தர பாரம்யவாதம் ஸுதராம் தொலைந்தது. வேறொரு தேவதை இப்படி விச்வரூபங்காட்டித் தன்னிடத்திலே நாராயணன் ஒடுங்கியிருப்பதாகக் காட்டவல்லதோ? ... ... ❋

ஸ்ரீ காஞ்சீ அண்ணங்கராசார்யருடைய
நாற்பத்தெட்டு விண்ணப்பங்கள் முடிந்தன.

# பசுக்களும் பதியும் P. B. A.

கீழே முடிவுபெற்ற நாற்பத்தெட்டு விண்ணப்பங்களில் இறுதியிலுள்ள நான்கு விண்ணப்பங்களை மறுமுறையும் வாசித்துவிட்டு இக்கட்டுரையை வாசியுங்கள். திருக்கோயில் பத்திரிகையில் 1967 செப்டம்பரிதழில் வெளிவந்துள்ள வழிகாட்டும் பெருமான் என்னுங் கட்டுரையின் ஆரம்பம் என்னவென்றால்; "சிவபெருமான் ஒருவரே பதி; உயிர்கள் அனைத்தும் பசுக்கள். அவன் ஒருவனே தலைவன். மற்ற அனைவரும் அவனுக்குக் கீழ்ப்பட்டவர்கள். அவன் ஒருவனே ஆண்டான். மற்ற யாவரும் அடிமைகள். இவ்வாறு வேதசிவாகமங்கள் முழங்குகின்றன" என்பதாம். சிவாகமங்கள் முழங்கியிருப்பவற்றை யாமறியோம். வேதங்கள் முழங்கியிருப்பவற்றுக்கு இப்பேச்சுக்கள் மிக முரணானவை. மேலே குறித்த கட்டுரைகாரர் எந்த வேதத்தில் எந்த இடத்தில் இவ்வாறு முழங்கியிருப்பதைக் கண்டாரென்பது வெளிவரவேண்டும்.

உலகமெல்லாம் ஓதும் யஜுர் வேதத்தில் ஆருவது காண்டத்தில் "தேஷாமஸுராணாம் திஸ்ர: புர ஆஸந்" என்று தொடங்கும் அனுவாகத்தில் திரிபுரஞ்செற்ற கதை கூறப்பட்டுள்ளது. தேவர்கள் ருத்ரனை த்ரிபுர ஸம்ஹாரஞ்செய்ய வேண்டினபோது "ஸோப்ரவீத் வரம் வ்ருணை. அஹமேவ பசூநாம் அதிபதிரஸாநீதி. தஸ்மாத் ருத்ர: பசூநாம் அதிபதி:" = உருத்திரப்பெருமான் பசுக்களுக்கு நான் அதிபதியாகவேணுமென்று தேவர்களை வரம் வேண்டிப் பசுபதியானதாகக் கூறப்பட்டுள்ளது.

பசுக்களென்பதற்கு இன்னது பொருள் என்பதை அந்த வேதத்திலேயே மூன்ருவது காண்டம் முதல் ப்ரச்நத்தில் "மநு: புத்ரேப்யோ தாயம் வ்யபஜத்" என்று தொடங்கிக் கூறியுள்ள கதையில் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம். நாபாநேதிஷ்டனென்கிற மநுகுமாரன் தந்தையின் சொற்படியே யாகசாலையிற்புகுந்து பசுக்களைக் கைப்பற்றிப் புறப்படுகையில் உருத்திரக் கடவுள் ஓடிவந்து நான் பசுபதியாயிருக்க இப்பசுக்களை எனது அனுமதியின்றி எங்ஙனம் கொண்டு போகிறீரென்று தகைந்ததாகவும் பிறகு அவனிடம் ஒரு வரம் வேண்டிக்கொண்டு விவாதத்தை முடித்துக்கொண்டதாகவும் வெட்டவெளிச்சமாகவுள்ளது.

ஆக ருத்ரனுடைய பசுபதித்வத்தினுண்மை இத்தகைத்தாயிருக்க, தாமாக ஓர் அபார்த்தங் கூறி அதை வேதங்கள் முழங்குவதாகவும் வஞ்சனையாக வரைவது அறிஞர்கட்கு அழகியதன்று.

திருமால் சிவபிரானைப் பூசித்ததாகச் சொல்லுவதும், பூசித்துப் பேறுகள் பெற்றதாகச் சொல்லுவதும் வேதங்களுக்கும் உபநிடதங்களுக்கும் பொருந்த மாட்டாவென்பதேயன்றி, சங்கர பகவத்பாதர்களால் கீதா பாஷ்யத்திலும் ஸஹஸ்ரநாம பாஷ்யத்திலும் பலவிடங்களில் ஸ்பஷ்டமாக மறுக்கப்பட்டவையென்பதை நமது ஸ்ரீ மஹாவிஷ்ணு ஸாம்ராஜ்யம் முதலிய பல நூல்களில் பரக்கக் காண்க. அவை வேண்டுவோர் ஒரு ரூ. அனுப்பிப் பெறுக. ... ...

# ஸம்ப்ரோக்ஷண மஹோத்ஸவங்களின் நிகழ்ச்சி.

சென்றவிதழில் தெரிவித்திருந்தபடி இரண்டு ஸம்ப்ரோக்ஷண மஹோத்ஸவங்களும் இனிது நிறைவேறின. 1—2—68 முதல் 5—2—68 வரை ஐந்துநாள் திருவிந்தளூர் ஸ்ரீ பரிமளரங்கநாதன் தேவஸ்தானத்தில் ஸம்ப்ரோக்ஷணம் வெகு சிறப்பாக நடந்தேறியது. ருக் யஜுஸ் ஸாம வேதங்களிலும் திவ்யப்ரபந்த கோஷ்டியிலும் இதிஹாஸபுராண ஸ்ரீ பாஷ்ய பகவத் விஷயாதி பாராயணங்களிலும் நூறு திருநாமங்களுக்குக் குறையாமல் ஸேவை ஸாதித்தார்கள். தேவஸ்தான அதிகாரிகளும் ஸ்தலாசார்ய புருஷர்களும் சேர்ந்து சிறப்பாக நடப்பித்தது குறிப்பிட த்தக்கது.

**காட்டுமன்னுர் ஸன்னிதி ஸம்ப்ரோக்ஷணம்.** ஸ்ரீமந்நாதமுனிகள் ஸன்னிதியிலும் 7—2—68 முதல் 11—2—68 வரையில் 5 நாள் விசேஷ ஶ்வபவமாக நடைபெற்றது. இவ்விடத்தில் பாராயண ஸ்வாமிகள் நூற்றைம்பது திருநாமங்கள் ஸேவை ஸாதித்தார்கள். ஸ்வாமிகள் நன்கு உபசரிக்கப்பட்டார்கள். ஸ்ரீமான் உவே. வாழப்பட்டு. ராமஸ்வாமி ஐயங்கார் மூன்ருவது நாளன்று எழுந்தருளியிருந்து பரத்வாஜாச்ரம நிகழ்ச்சியை நினைப்பூட்டும்படியாக விசேஷ ததீயாராதனம் நடப்பித்தார். இப்படி ஸமய விசேஷங்களில் ஸ்தல விசேஷங்களில் ஸ்வரூபாநுரூபமாக உத்ஸாஹத்துடன் கைங்கரியங்களை நடத்தி வரும் இந்த ஸ்வாமிக்கு அடியேன் அன்று **ஸ்ரீ வைஷ்ணவஸார்வபௌமர்** என்று விருது சூட்டினேன். அனைவரும் கரகோஷத்தினுல் அதை ஆமோதித்தார்கள்.

ஸ்ரீ காஞ்சீ ஜகத்குரு ப்ரதிவாதிபயங்கரம் காதிஸ்வாமியின் சிஷ்யகோடிகளான பாம்பே ஸோமாணிவர்க்கத்தார் பெருமாள் தாயார் ஆசாரியர்களுக்குப் பட்டுப் பீதாம்பரங்கள் ஸமர்ப்பித்து ஸ்வாமிகளுக்கெல்லாம் பத்துரூபாவீதம் ப்ரத்யேக ஸம்பாவனை ஸமர்ப்பித்தார்கள்.

கோயம்புத்தூர் கெரடிகோவில் அர்ச்சககைங்கரியம் நிர்வஹிக்கும் (ரிக்வேதி) ஸ்ரீமான் உவே. B. வரதாசாரியர் இந்த திவ்யஸ்தலத்தில் இந்த விசேஷ ஸமயத்தில் ஸ்வாமிகளுக்கெல்லாம் திருப்பரிவட்டம் ஸமர்ப்பிக்கவேணுமென்று பாரித்துத் தமது வாக்கு செல்லும்படியான விலக்ஷணுதிகாரிகளுக்கு நியமித்து ஏறக்குறைய இரண்டாயிரம் ரூபா மதிப்புள்ள வைதிகாலங்கார யோக்யமான உயர்ந்த திருப்பரிவட்டங்களை வாங்கி யெடுத்துக்கொண்டு வந்து ஸகல ஸ்வாமிகளுக்கும் ஸமர்ப்பித்தனர். பல பேர்களுக்கு 5, 8, 10 வீதம் ரொக்கமும் ஸமர்ப்பிக்கலாயிற்று. எதிர்பாராத இந்த மஹத்தான கைங்கர்யத்தினுல் இந்த ஸம்ப்ரோக்ஷண மஹோத்ஸவம் அத்யந்தம் சோபித்தது. இந்த வரதாசாரியர்ஸ்வாமி இத்தகைய கைங்கர்யத்தை நிறைவேற்றப்போகிருரென்று இரண்டு நாள் முன்னமே அறியப்பெற்ற அடியேன் அவர்க்கு நாதமுனிகள் ஸன்னிதியில் பரமார்த்த ஸார்வபௌமரென்று விருதளிக்க நிச்சயித்து அதை அவர்க்கு முன்னுடியே தெரிவித்திருந்தேன். அவரிட அபிமானியான திரு. A. R. நாகமாணிக்கம் செட்டியா ரென்கிற பரமபக்தர் அந்த விருதை உடனே தங்கடாலரில் பொறித்து எட்டு பவுன் கொண்ட ஒரு செயினில் சேர்த்து விலக்ஷணபூஷணமாக்கி அவரோடுகூடவேவந்து அதை என்னிடம் கொடுத்தார். அங்குள்ள ஸ்ரீ வைஷ்ணவர்களெல்லாரும் மிகவுகந்து வேதகோஷம் செய்ய அதை அந்த ஸ்வாமிக்கு நாதமுனிகளின் ப்ரஸாதமாக அணிவித்தேன். "ஹாரேண சுசுபே தேந" என்னும்படியாயிருந்தது. ... ... ❋

# ஸ்ரீபாஷ்யாதிகரணமெழுபத்தாறு.

(முன்னிதழ்த் தொடர்ச்சி.)

## 22. ப்ரக்ருத்யதிகரணம்.

(முதலத்யாயம் நான்காவது பாதத்திலுள்ளது.)

கீழ்க்கடந்த வாக்யாந்வயாதிகரணத்தில் இரண்டாவதான *ப்ரதிஜ்ஞாஸித்தேர் லிங்கம் ஆச்மரத்ய:* என்கிற ஸூத்ரத்திலுள்ள ப்ரதிஜ்ஞாபதத்தினால் *ஏகவிஜ்ஞாநேந ஸர்வவிஜ்ஞாந ப்ரதிஜ்ஞையன்றோ ப்ரஸ்தாவிக்கப் பட்டது. அதனால் ஜகத்துக்கு உபாதாநகாரணம் பரமபுருஷனேயென்று தேறிற்றுகிறது. அது பொருந்தாதென்று பூர்வபக்ஷம் ப்ரஸக்தமாக அதை நிரரகரித்து உபாதான காரணமும் பரமபுருஷனே யென்று ஸ்தாபிக்கத் தோன்றியது இவ்வதிகரணம்.

### ஸூ. ப்ரக்ருதிச்ச ப்ரதிஜ்ஞாத்ருஷ்டாந்தாநுபரோதாத். 1-4-23.

ப்ரக்ருதி: என்கிறபதம் உபாதாநகாரணவாசகம். ச என்பதனால் நிமித்த காரணத்வம் ஸமுச்சயிக்கப்படுகிறது. பரப்ரஹ்மம் ஜகத்துக்கு நிமித்தகாரண மென்பதில் ஆக்ஷேபமில்லாதவனை நோக்கிச் சொல்லுகிறதாகையாலே நிமித்த காரணமாயிருப்பதுபோலவே உபாதாநகாரணமுமாகிறதென்று சொல்லிற்றுகிறது. இதற்கு இரண்டு ஹேதுக்கள் சொல்லப்படுகின்றன— [ப்ரதிஜ்ஞாத்ருஷ்டாந் தாநுபரோதாத்] என்று. ப்ரதிஜ்ஞையாவது ஏகவிஜ்ஞாநேந ஸர்வ விஜ்ஞாந ப்ரதிஜ்ஞை; த்ருஷ்டாந்தமாவது-ம்ருத்பிண்ட கடாதி நிதர்சனம். ஆக இவ் விரண்டும் பொருந்த வேண்டுமானால் பரப்ரஹ்மத்திற்கு உபாதாந காரணத்வம் இருந்து தீரவேணும்; உபாதாந காரணத்வம் இசையப்பட்டால் தான் ப்ரதிஜ் ஞாத்ருஷ்டாந்தங்கள் பொருந்தும் – என்பது ஸூத்ரத்தின் பொருள். ஒரே மண்ணானது முதலில் பிண்டமென்கிற அவஸ்தையையடைந்திருந்து பிறகு பானை யென்னுமவஸ்தையை அடையக் காணாநின்றோம். இதில் முந்தின அவஸ்தை யோடு கூடின த்ரவ்யம் உபாதான மென்றும், பிந்தின அவஸ்தையோடு கூடின த்ரவ்யம் உபாதேயமென்றும் வழங்கப்படுகிறது. அங்கு முந்தின அவஸ்தை பிந்தின அவஸ்தை என்று சொல்லப்படுகிற இரண்டவஸ்தைகளையுமுடைய த்ரவ்யம் ஒன்றே யாதலால் உபாதான வஸ்துவை யறிவதும் உபாதேய வஸ்துவை யறிவதும் ஒற்றுமைப்படுகிறபடியாலே உபாதானம் அறியப்பட்டால் உபாதேயமும் அறியப்பட்டதாகத் தேறுகிறது. அதுபோல ப்ரக்ருதத்தில் 'ப்ரஹ்மம் அறியப் பட்டால் ஜகத் தெல்லாம் அறியப்பட்டதாகிறது' என்று *யேநாச்ருதம் ச்ருதம் பவதி* இத்யாதி ச்ருதியாலே ஓதப்படுவதால் ப்ரஹ்மம் ஜகத்துக்கு உபாதான மென்று அறியப்பட்டதாகிறது.

இதன்மேல் ஒரு கேள்விவரும்; த்ருஷ்டாந்தத்தில் ம்ருத்தென்கிற ஒரு த்ரவ்யத்திற்கே பிண்டத்வம் கடத்வம் என்கிற இரண்டவஸ்தையும் வருகிறபடி யாலே பிண்டஜ்ஞானத்தாலே கடஜ்ஞான முண்டாவது பொருந்தும்; தார்ஷ்டாந் திகத்தில் ஜகத்தும் ப்ரஹ்மமும் ஒன்றன்றிக்கே வெவ்வேறுபட்ட பொருள்களா

கையாலே ப்ரஹ்மஜ்ஞானமும் ப்ரபஞ்சஜ்ஞானமும் ஒற்றுமைப்படாதாகையாலே ப்ரஹ்மஜ்ஞானத்தாலே ப்ரபஞ்சஜ்ஞானம் ஸம்பவிப்பதரிது. உபாதாந-உபாதேய பாவம் ஸம்பவிப்பதுமரிது; ஏனென்ருல், ப்ரஹ்மம் நிர்விகாரமென்பது நிர்விவாதம்; விகாரமும் அவஸ்தாபத்தியும் பர்யாயமாகையாலே விகாரம் ஸம்பவிக்கமாட்டாதென்ற போதே உபாதாநத்வமும் ஸம்பவிக்கமாட்டாதென்று தேறுமே. ஆக இக் கேள்விக்கு ஸமாதான மென்னென்னில்; கேண்மின்; ப்ரஹ்மஜ்ஞானத்தாலே ப்ரபஞ்சஜ்ஞானமுண்டாவதாக ச்ருதி சொல்லியிருக்கையாலே அவற்றுக்கு உபாதாந-உபாதேய பாவமில்லாமல் அது ஸம்பவியாதாகையாலே அஃது இசையத் தக்கது. விகார சூன்யமான ப்ரஹ்மத்துக்கு விகாரரூபமான அவஸ்தை ஸாக்ஷாத்தாக ஸம்பவிப்பதன்று; சேதநாசேதநாத்மக ப்ரபஞ்ச மாகிற சரீரத்தின் வழியாய் விகாராச்ரயத்வம் ஸம்பவிக்கிறது—என்பதாக ச்ருதியின் அபிப்ராயம் ஸித்திக்கிறது. இதை நம் ஆசார்யர்கள் நன்கு உபபாதிக்கிருர்கள்.

பிள்ளை லோகாசார்யர் அருளிச்செய்த தத்வத்ரயத்திலே ஈச்வர ப்ரகரணத்தில்—"இவன் தானே ஜகத்தாய்ப் பரிணமிக்கையாலே உபாதாநமுமாயிருக்கும்; ஆனுல் நிர்விகாரனென்னும்படி யென்னென்னில்; ஸ்வரூபத்துக்கு விகாரமில்லாமையாலே, ஆனுல் பரிணாமமுண்டாம்படி யென்னென்னில்; விசிஷ்ட விசேஷண ஸத்வாரகமாக. ஒரு சிலந்திக்குண்டான ஸ்வபாவம் ஸர்வ சக்திக்குக் கூடாதொழியாதிறே" என்றருளிச் செய்த விடத்தில் மணவாளமாமுனிகளின் வியாக்கியானத்திலே விசதமாகக் கண்டு கொள்வது.

பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ-உத்தரசதகத்தில்- *கார்யே அனந்தே ஸ்வதநு முகதஸ் த்வாம் உபாதாந மாஹு: ஸா தே சக்திஸ் ஸ்வகரமிதரச் சேதி வேலாம் விலங்க்ய, இச்சா யாவத் விஹரதி ஸதா ரங்கராஜாநபேக்ஷா ஸைவைசாநாத் அதிசய கரீ ஸோர்ணநாபௌ விபாவ்யா.* என்ற ச்லோகத்தில் இவையெல்லாம் ஸாரமாக வருளிச் செய்தார். அவ்விடத்திலும் நம்முடைய வியாக்கியானத்திலே தெளியக் காணலாம். .... ... .... .... ... (22)

ஸ்ரீகாஞ்சீ அண்ணங்கராசாரியர் எழுதிய

**ஸ்ரீபாஷ்யாதிகரணமெழுபத்தாறில் முதலத்யாயம்**

முற்றிற்று.

# ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்ய ஸமாபனம்.

ஸ்ரீ. உ. வே. மதுராந்தகம் வீரராகவாசார்ய ஸ்வாமியின் 'ஸம்ப்ரதாய ஸமதா' என்னும் சுவடிக்கு மறுப்பாக நாமெழுதிவரும் ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்யம் கீழ் 229, 230 ஆகிய இரண்டு ஸஞ்சிகைகளில் பெரும்பாகம் வெளிவந்திருந்தாலும் இன்னமும் வெளிவரவேண்டிய பாகம் மிகமிகவுள்ளது. ஆயினும் சில காரண விசேஷங்களினால் இதை இப்போது ஸமாபனம் செய்ய விரும்புகிறோம். இதற்கு இரண்டு காரணங்களை இங்குத் தெரிவிக்கிறோம்.

நமது ஸ்ரீராமாநுஜனை வரவழைத்து வாசிப்பவர்களில் லௌகிகப் பெரியார்களே அதிகமாகவுள்ளார்கள். அதிலும் புதுடில்லியில் அதிகமென்னலாம். அவர்களில் நமக்குப் பரமாப்தரான ஒரு வடகலை ஸ்வாமி நமக்கெழுதியதாவது— "தேவரீருடைய ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்யத்தை—இதுவரை வெளிவந்திருக்கின்ற 80 பாராக்களையும் பல தடவை வாசித்தேன். வித்பன்னர்களான சில பண்டிதர்களைத் துணைகொண்டும் வாசித்தேன். விஷயங்களில் காணும் நிரூபணங்களுக்கு ஒன்றும் பதில் சொல்ல முடியாதென்பதை யாவரும் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டியிருக்கிறது. ஆனால் எனக்குத் தோன்றுகிறவொரு குறையை விநயத்துடன் விஜ்ஞாபிக்கிறேன். பிழையிருந்தால் க்ஷமிக்கவேணும் ஸ்ரீ. உ. வே. மதுராந்தகம் ஸ்வாமி இப்போது எதிரியாய் நிற்கிறார். இவர் ஏதோ வாசித்தவரேயொழிய வாசிக்காதவரன்றோ. அவரைக் குறிப்பிடும்போது தேவரீர் அந்தகர் அந்தகர் என்றே குறிப்பிட்டு வருவது யுக்தமாகுமா? விஷயங்களில் அவரை வாய்மாளப்பண்ணி விடுவதுபற்றி விசாரமில்லை அந்த ஸ்வாமியைக் குறிப்பிடும்போது கௌரவமாகக் குறிப்பிட்டால் நன்றாயிருக்கும். இங்குப் பல பேருடைய அபிப்ராயத்தை அடியேன் முன்னின்று தெரிவித்தேன்...." இத்யாதிகள். எழுதியிருந்தார்.

இதற்கு உடனே அவர்க்கு பதிலெழுதினேன்; அதாவது; அடியேனுடைய ஸாம்ராஜ்ய நூலை தேவரீர்கள் ஊன்றி நோக்கவில்லையென்று நினைக்கிறேன்; ஸ்ரீ. உ. வே. மதுராந்தகம் வீரராகவாசார்ய ஸ்வாமி யென்றும் மதுராந்தகம் ஸ்வாமி யென்றும் பலகால் எழுதியிருக்கவில்லையா? இப்போது கடைசியாக வெளிவந்துள்ள 230 லக்கமுள்ள இதழில் இரண்டாவது ஆஹ்நிகம் தொடங்கும்போதே "மதுராந்தகம் ஸ்வாமி" என்று நிர்தேசித்திருப்பதைக் காணலாகாதா? அடிக்கடி நிர்தேசிக்க நேரும்போது 'மதுராந்தகர்' என்பதற்கு ஸம்க்ஷேபமாக 'அந்தகர்' என்று குறிப்பிடுவதைத் த்வறாக நினைக்கலாகாது—இத்யாதிகள் எழுதினேன். அதை அவர் பெற்று "தேவரீர் தெரிவித்திருக்கிற ஸமாதானம் ஸரிதான்; பார்ப்பவர்களுக்கு அந்தகரென்பது பரிஹாஸ வார்த்தைபோல் படுமாதலால் அதை மாற்றி வேறு விதமாக அமைத்தால் நல்லது என்பதை அடியேன் மறுபடியும் விஜ்ஞாபிக்கிறேன். மதுராந்தகம் ஸ்வாமி தேவரீருடைய நூலுக்கு பதிலெழுதுகிறாரா? என்பதைத் தெரிந்து கொள்ள விரும்பிச் சில ஆப்தர்களுக்கு எழுதியிருந்தேன். பதில் நூல் எழுதிக் கொண்டிருக்கிறாரென்றும் மதுரையில் அச்சிடுவதற்கு அனுப்பியிருக்கிறாரென்றும் அச்சாகி வருகிறதென்றும் தெரிய வருவதாக என்னுடைய உறவினரொருவர் எழுதியிருக்கிறார். அது விரைவில் வெளிவருமென்று நினைக்கிறேன். அதையும் கடாக்ஷித்து விட்டுப் பிறகு கண்டம் கண்டமாகவல்லாமல் ஒரே ஸஞ்சிகையில் தேவரீருடைய கண்டனங்களை யெல்லாம் வெளியிட்டால் வாசிப்பவர்களுக்கு ஸௌகரியமாயிருக்கு மென்பதும் அடியேனுடைய

அபிப்பிராயம்'' என்று பதில் எழுதினர். அவர் ஒரு பெரியமனிதராதலால் அவருடைய நியமனத்திற்கு மதிப்பு கொடுக்கவேணுமென்று தோன்றிற்று.

மற்றொரு முக்கியகாரணமும் தெரிவிக்கலாகிறது. நமது ஸாம்ராஜ்ய நூலில் (ஆரம்பஸஞ்சிகையில்) பதின்மூன்ருவது வாக்யச்ரேணியில்—

"ஆக இவ்விருவரும் [மதுராந்தகஸ்வாமியும் D. T. T. ஸ்வாமியும்] பகவத்ராமாநுஜ தர்சநபாஹ்யர்களென்பது பன்னிரண்டாண்டுகளாக ஆஸித்தமாகியுள்ளது; இதைப்பற்றி வாயைக்கையைத் திறந்திலரிவர்......ஒரு பக்கத்தில் [அத்ராஸ்தி பஹு அஸாமஞ்ஜஸ்யம் என்று] தேசிகஸூக்தி தூஷணமும், மற்றொருபக்கத்தில் [நிர்ப்பந்தாதேவ. இத்யாதிநா] பகவத்ராமாநுஜ தூஷணமுமாகப் போது போக்கி வருமிவர்கள் எந்தப்ரமாணத்தைக்கொண்டு எந்த ப்ரமேயத்தை ஸாதிக்கவல்லவர்களோ, அதை மத்யஸ்தர்களே நிர்ணயிக்கக்கடவர்கள். இவர்கள்திறத்தில் வ்ருச்சிகதஷ்டமலிம்லுசந்யாயத்தைப் பலகால் விளக்கியிருக்கிறோம். இவ்விருவரும் விடையிறுத்துத் தீரவேண்டிய விஷயங்கள் ஒன்றிரண்டல்ல; ஒரு நூறு தேறும். எல்லாவற்றுக்கும் விடை வெளியிட்டு விட்டோமென்று உலகவஞ்சனையாகச் சொல்லிப் பிழைக்கவும் முடியாதிவர்களால். எத்தனைவிஷயங்களுக்கு இவர்கள் விடையிறுத்தாக வேண்டுமென்பதை ஸ்ரீஉவே. Raosahib. S. ராகவையங்கார்ஸ்வாமி போல்வாரைக் கேட்டால் புத்தகம் பாராதே கிடு கிடு வென்று வரிசையாகச் சொல்லுவர்கள்.''

என்றெழுதியிருந்தோம். இங்கு 'ராகவையங்கார் ஸ்வாமிபோல்வாரை' என்று நாமெழுதியது வார்த்தைப்பாடு; இவ்விஷயத்தில் அவரைப்போல்வார் வேறொருவர்கிடையார்; அநந்வயாலங்காரரீதியில் அவரைப்போல்வார் அவரேதான். அந்தஸ்வாமி சென்ற ஐப்பசி மாதத்தில் சதாபிஷேகம் கண்டருளினவர்; ஜ்ஞாநசீலவயோவ்ருத்தர். அந்தஸ்வாமி இந்த ஸாம்ராஜ்யநூல் வெளிவந்தவரைக்கும் [80 பாராக்களையும] பூர்த்தியாகக் கடாக்ஷிந்து அருளியுள்ள ஸ்ரீமுகம் பாரத ராமாயணதிகளைப் போன்றது; அதைப்பார்த்தபிறகு ஏதுக்கு இந்த வீண்பரிச்ரமமென்று தோன்றிற்று. **அந்த ஸ்வாமியின் ஸ்ரீமுகத்திலிருந்து** ஸ்வல்பபாகமே தெரிவிக்கிறேனிங்கு. **ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்யம் பாரா 38 நம்முடைய** கோரமான சபத மொன்று என்னும் மகுடம் புனைந்ததில் **"கி.பி. 19-வது நூற்ருண்டு** பிறந்த பிறகுதான் நீங்கள் தேசிகனை யறிந்தவர்களே யொழிய அதற்கு முன்பு தேசிகனென்ருே எம்பெருமானுரென்ருே ஆழ்வாரென்ருே ப்ரஸ்தாவித்த ஒரு வடகலை வ்யக்திகூட இல்லையென்று நாம் நெடுநாளாக நிரூபித்து வருகிருேம். அப்படிப்பட்டவொரு புராதந வ்யக்தியைக் காட்டிவிட்டீர்களாஞல் இதுகாறும் நான்கு பாஷைகளிலும் நான் எழுதிவெளியிட்டுள்ள எழுநூறு புத்தகங்களையும் கிழித்தெறிந்துவிட்டு ஆயுச்சேஷமுள்ள வரையில் அஜ்ஞாத வாஸம் செய்வேனென்பது ஸத்யம்" என்று தேவரீர் எழுதியிருப்பதைக் கண்டுவைத்தும் வாயையும் கையையும் மூடிக்கிடப்பவர்களோடு என்ன பிணக்கு ? என்கிருர் ராகவையங்கார் ஸ்வாமி. சேட்லூர் நரஸிம்ஹாசாரியரும் (திருச்சி) ஏ. வி. கோபாலாசாரியரும் எந்தெந்த விஷயங்களில் நெடு நாள் வாதித்து முடிவில் க்ஷாமணம் செய்து கொண்டு ஓய்ந்தார்களோ, அந்த விஷயங்களை மேன்மேலும் வளர்த்திக்கொண்டு போவதில் என்னபயன் ? என்கிருர். ஆகவே மதுராந்தகம் ஸ்வாமியிடமிருந்து நேர்மையான விடையளிப்பு ஏதேனும் வந்தால் மேலே தொடர்ந்து எழுதுவோமென்று நற்காலம் நிறுத்திக்கொண்டோம். .... .... .... *

# எழுபத்தேழு பெரியார்களின் பெருமை.

(முன் தொடர்ச்சி-6)

## 32. ஸ்ரீமதுபயவே, காரப்பங்காடு சிங்கப்பெருமாள் ஸ்வாமி.

ஸ்ரீவைஷ்ணவ வுலகில் ஸ்வாமியின் புகழ் அத்விதீயம். அடியேனுக்கு இருபத்தைந்து வயது வரையில் இந்த ஸ்வாமியின் பரிசயம் ஏற்படவில்லை. ஸ்ரீஉவே. திருக்கண்ணபுரம் பட்டப்பா ஸ்வாமியோடு மிக நெருங்கின பழக்கமிருந்த காலத்தில் அவர் இந்த ஸ்வாமியின் ப்ரபாவாதி சயங்களைப் பலகால் பன்னியுரைக்கக் கேட்டிருந்தேன். ஸ்வாமியை ஸேவிக்க வேணுமென்றே ஒரு ஸமயம் காரப்பங்காட்டுக்கு விடைகொண்டிருந்து ஸேவித்து வந்தேன். பிறகு பலபர்யாயங்கள் நெருங்கி ஸேவிக்கப்ராப்தமாயிற்று. ஸ்வாமி சிலவாண்டுகள் நம்பெருமாள் ஸன்னிதியிலெழுந்தருளியிருந்து ஸ்ரீரங்கநாராயண ஜீயர் மடத்தில் ஸ்ரீபாஷ்ய பகவத் விஷயப்ரவசனம் செய்து கொண்டிருந்த காலத்தில் சிலநாட்கள் அணுகி வர்த்திக்கும் பாக்கியம் நேர்ந்தது. ராஜமன்னர் ஸன்னிதி, மதுரை, திருவல்லிக்கேணி ஸ்ரீபெரும்பூதூர் முதலானவிடங்களில் ஸ்வாமியின் உபந்யாஸாம்ருத தாரைகளைப் பருகும் பாக்கியமும் வாய்த்தது. ஸ்வாமியிடத்தில் அடியேன் கண்ட அதிசயம் நம்முடைய உபய வேதாந்த க்ரந்தங்களிலும், அனந்தாழ்வானுடைய வேதாந்தவாதாவளியிலும், மற்றும் நவீந க்ரந்தங்களிலும் யாவரும் வியக்கத் தக்கதான உபஸ்திதி விசேஷம். இவ்விஷயத்தில் ஸ்ரீகாஞ்சியிலெழுந்தருளியிருந்த விரக்தி பாஷ்யகாராசார்ய ஸ்வாமியை ஒப்புச் சொல்லலாமாயினும், அந்த ஸ்வாமிக்கு க்ரந்த ப்ரவசனங்கள் தவிர உபந்யாஸங்களுக்கு வாய்ப்பு ஏற்படவில்லை. இந்த ஸ்வாமிக்கு இரண்டுக்கும் அவகாசம் அமைந்திருந்தது. ஸ்வாமிக்கு ஜ்யோதிச் சாஸ்த்ரத்திலும் அபாரமான புலமையிருந்தது. ஸ்வாமியின் திருத்தமையனுருடைய திருக்குமாரர் (அம்மாஞ்சி) வேங்கடாசாரியரென்பவர் ஸ்வாமி பக்கலிலேயே உபயவேதாந்தங்களுமதி கரித்து வாக்மியாக இருந்தவர் அகாலத்தில் பரம்பதித்து விட்டார். தற்காலம், ஸ்வாமியினுடைய தௌஹித்ரராய் ஸ்வீக்ருத புத்ரரான ஸ்ரீவேங்கடாசார்ய ஸ்வாமியின் ப்ரபாவாதிசயம் ஜகத் விக்க்யாதம். ஸ்ரீவைஷ்ணவக் குழாங்களுடனே பல்லாண்டு வாழ்க. *

## 33. ஸ்ரீமதுபயவே, எம்பார்—க்ருஷ்ணமாசார்யஸ்வாமி.

ஸ்ரீரங்கத்திலே திருவவதரித்து ப்ரசண்ட பண்டிதோத்தமராகப் புகழ் பெற்றவர் இந்த ஸ்வாமி. "அதீதமத்யாபித மார்ஜிதம் யச:" என்ற பழமொழிக்கு இலக்கானவர்களில் தலை நிற்பவர் இந்த மஹாஸ்வாமி. எம்பார் திருவம்சத்தவராகையாலே கோயிலில் ஸ்தலாசார்ய புருஷராக வெழுந்தருளியிருந்தார். நியாய வேதாந்தங்களில் வாதப்போர் நிகழ்த்தவல்ல மஹாவித்வத் கேஸரியாக விளங்கினவர். ப்ரக்க்யாதராக எழுந்தருளியிருந்த கோஷ்டீபுரம், ஸௌம்ய நாராயணாசார்யஸ்வாமி, திருவஹீந்திரபுரம். கச்சிக்கிடாம்பி பாஷ்யகாரார்ய ஸ்வாமி

உத்தமசீலி. ரங்கஸாமி ஐயங்கார் ஸ்வாமி முதலானுர் ஸ்வாமியிடத்தில் சாஸ்த்ரங்களதிகரித்துத் தேறினவர்கள். ஸ்வாமியினுடைய ப்ரசண்ட பாண்டித்யத்தையறிந்த குர்ஜரதேசத்தவர்கள்–ஸ்வாமிநாராயண ஸம்ப்ரதாயஸ்தர்கள் ஸ்வாமியை அந்த பராந்தத்திற்கு வரவழைத்து வடதால் என்னுமிடத்திலுள்ள ஸம்ஸ்க்ருத வித்யாலயத்தில் ஸ்வாமியை ப்ரதாநாத்யாபகராக வைத்ததனுல் அந்நாட்டினர் பலர் வேதாந்தமதிகரித்துத் தேறினுர்கள். அக்காலத்தில் ஸ்வாமி தர்சன க்ரந்தங்கள் பலவற்றை யெழுதுவதற்கு அவகாச மேற்பட்டது. அவை பெரும்பாலும் அந்தேவாஸிகளால் அச்சிடப்பட்டுமுள்ளன. ஸ்வாமியின் ஜ்யேஷ்டதிருக்குமாரர் ஸ்ரீமதுபயவே, எம்பார், ராமாநுஜாசார்ய ஸ்வாமி ஸம்ப்ராதாய க்ரந்த நிர்வாஹ துரந்தரராய் பெங்களூரில் சிஷ்யர்களுக்கு ப்ரவசனம் செய்துவருகிருர். *

## 34. ஸ்ரீமதுபயவே, கபிஸ்தலர், அனந்தாசார்யஸ்வாமி.

இந்தஸ்வாமி திருநாட்டுக்கெழுந்தருளி 60 ஸம்வத்ஸரமானுலும் ஸ்வாமியினுடையபுகழ் தென்னுட்டில் மலிந்துள்ளது. ஸ்வாமி கபிஸ்தலத்தில் அவதரித்தவராயினும் திருநாங்கூரிலும் திருவரங்கம் பெரியகோயிலிலுமே பெரும்பாலும் வாழ்ந்தவர். திருமலை அனந்தாழ்வானுடைய திருவம்சத்தவர். பகவத்விஷயம் ஸாதிப்பதில் அப்ரதிமமான வல்லமைபெற்றவர். அடியேன் இளமையில் ஸ்வாமியினுடைய காலக்ஷேப கோஷ்டியில் அந்வயித்திருக்கிறேன். விஷயங்களைப் பூப்பறித்தாற்போலே ஸாதிப்பதில் மிகவிரகர். ம்ருதுமதுரபாஷி. அனேகபர்யாயங்கள் ஈட்டுப்ரவசனம் செய்தருளினவரென்று ப்ரஸித்தியுண்டு. அஸ்மதாசார்யரான ஸ்ரீஜகத்குரு, காதிஸ்வாமி ஒருஸமயம் திருநாங்கூர்க்கு எழுந்தருளியிருந்தபோது அடியேனும் கூட விடைகொண்டிருந்தேன். அப்போது இந்தஸ்வாமி அவ்விடத்திலெழுந்தருளியிருந்தார். இவர் காதிஸ்வாமியிடம்வந்து வார்த்தையாடுகையில் *பூவார் திருமாமகள்புல்கியமார்பா!* என்கிற திருவெள்ளக்குளப் பாசுரத்தையும் * அகலகில்லேனிறையுமென்கிற திருவேங்கடமுடையான் பாசுரத்தையும் ஸமந்வயப்படுத்தி மிகவினிதாக உபந்யஸித்தருள, காதிஸ்வாமி பரம ஸந்தோஷமடைந்து விசேஷஸத்காரம் செய்தருளினுர். அவருடைய ஸ்வீகார திருக்குமாரரும் வாக்மியாக இருந்து சிலவாண்டுகட்குமுன்பு திருநாடலங்கரித்தார். அவருடைய ஸ்வீகார திருக்குமாரர் இப்போது வாக்மியாயிருந்து வருகிருர்.

## 35. ஸ்ரீமதுபயவே, கோயில், கோவிந்தாசார்யஸ்வாமி,

திருக்கோட்டியூர் கோவிந்தாசார்ய ஸ்வாமியென்றும், நம்மாழ்வார் ஸன்னிதி கோவிந்தாசார்ய ஸ்வாமியென்றும் வழங்கப்பெற்றவிவர் கோயிலில் நித்ய வாஸநிரதராய் நித்யப்ரவசன நிஷ்ணுதராயெழுந்தருளியிருந்தார். வியாகரண சாஸ்த்ரத்தில் பாரங்கதர். ஸம்ப்ரதாயக்ரந்தங்களை வரியடைவேகற்று வரியடைவே ப்ரவசனம்செய்து பேர்ந்தவர். பகவத்விஷயம் மட்டுமன்றிக்கே மற்றும் மூவாயிர வியாக்கியானங்களையும் ரஹஸ்யங்களையும் நாள்தவருமல் தொண்டரடிப்பொடியாழ்வார் ஸன்னிதிமுதலானவிடங்களில் காலக்ஷேபம் ஸாதித்துக்கொண்டே வாழ்நாளைக் கழித்தவர். பாஞ்சராத்ராகமங்களில் மிக்கபரிசீலனையுள்ளவரென்பது

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்



# ஆழ்வார் திருநகரி-மாறன் செந்தமிழ்மகாநாட்டின் தொடக்கத்தில்(17-2-68) ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியரின் முன்னுரை விண்ணப்பம்.

— வெண்பா —

**மாறனில் மிக்குமோர் தேவு முளதேயென்**
**றீறில் புகழோங்க வீந்தசொல்—தேறிடின்**
**சேமங் குருகையோ வென்றுலவுஞ் செய்யுட்கே**
**சேமம் பொலியுஞ் சிறந்து.**

(இதன் கருத்து.) திருவாய்மொழியில் (2-2-3) *ஏறனைப்பூவனை யென்று தொடங்கும் பாசுரத்தினீற்றடி *மாறனில் மிக்குமோர் தேவுமுளதே* என்றுள்ளது. இதில் **மாறனில்** என்னும் முதற்சொல் 'மால்தனில்' என்று பிரிந்தேயாகவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை; **மாறனில்** என்றேநின்று குருகூர் மாறனிற்காட்டிலும் மிக்கதொரு தெய்வமுளதோவென்று ஸ்ரீ மதுர கவிகள் திருவுள்ளம்பற்றிக் குதுகலித்தவாறுபோல நாமும் குதுகலிக்கக் குறையில்லை. இப்பொருளில், முன்னேயுள்ள மூன்றடிகளும்



பொருந்துமோ? எனின், நன்கு பொருந்தும். திருப்பதிகளில் வாழும் பெரியார்களை ஆழ்வார்கள் குலாவிக் கூறுமிடத்து *செந்தாமரை மேலயனோடு சிவனுமனைய பெருமையோர்* என்றும், *வண் சிவனுமயனுந்தானுமொப்பார் வாழ்* என்றுங் கூறியிருப்பது காண்கிறோம். **ஏறனை வேறன்றி** = *நுண்ணூலார்வின் நீலார்கண்டத் தம்மான்* என்றாழ்வார்தாமே அருளிச்செய்யும்படி ஸர்வஜ்ஞனென்று பேர்பெற்ற பரமசிவனென்னலாம்படி யென்கை. திருவடியை நோக்கிப் பெருமாள் இளையோனிடஞ் சொல்லுகையில் *வில்லார் தோளிளைய வீர! விரிஞ்சனோ விடைவலானோ?* (கம்பர்) என்றது மிங்கே நினைக்கத்தகும். **பூவனை வேறன்றி**=நால்வேதம் வல்ல நான்முகனென்னலாம் படியென்கை. **பூமகள் தன்னை வேறன்றி**—*வேரிமாறாத பூமேலிருப்பாள் வினை தீர்க்குமாபோலே *பண்டை வல்வினைபாற்றியருள்பவரிறே ஆழ்வாரும். ஆக, ஏறன் பூவன் பூமகள் என்னுமிவர்களில் அபேதமாக நினைத்து ஆழ்வாரை நிலத்தேவர் தொழுவரென்க. **மேல்தன்னை மீதிட நிமிர்ந்து**=(திருவிருத்தத்தில்) "விண்ணுளாரிலுஞ் சீரியரே" என்றருளிச் செய்தபடியே விண்ணுளாரிற்காட்டிலும் சீர்மைபெற்று என்றபடி. **மண்கொண்ட**= ப்ரபந்நஜன கூடஸ்தராகையாலே மண்ணுளாரனைவரையும் அடிமைப்படுத்திக்கொண்

டவர். அவர் யாவரெனின்? மாறன் = நம்மாழ்வார். அவரிற்காட்டிலும் மிக்கதோர் தெய்வமுண்டோ? என்று பாசுரத்தின் பொருள் நன்கு பொருந்தக் குறையில்லை.

ஆக, இத்தகைய பொருள்கொண்ட பாசுரத்தை நோக்கின், [**சேமங்குருகையோ என்றுரைக்குஞ் செய்யுட்கே சேமம் பொலியுஞ் சிறந்து**] "சேமங்குருகையோ செய்ய திருப்பாற்கடலோ, நாமம் பராங்குசமோ நாரணமோ,—தாமம் துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்குமுளவோ பெருமானுனக்கு" என்று பிரசித்தமான செய்யுளில் ஆழ்வார்க்கும் எம்பெருமானுக்கும் தெரிவிக்கப்பட்டுள்ள ஒற்றுமை நயம் சேமம் பெற்றதாம்—என்பது மேலே குறித்த வெண்பாவின் கருத்து.

இதனால் மங்களாசரணஞ்செய்து, மேல் ஆழ்வாரருளிச்செயலின்
அதிசயங்களிற் சிலவற்றை விண்ணப்பஞ்செய்வோம்.

ஆழ்வார்களுள் நம்மாழ்வார் அவதார முறையில் ஐந்தாமவராயினும் பல காரணங்களையிட்டு இவரே முதன்மை பெற்றிருப்பர். சடகோபர், சடாரி, பராங்குசர், வகுளாபரணர், காரிமாறன், திருநாவீறுடைய பிரான் என்னும் இவை முதலான திருநாமங்களும் இவ்வாழ்வாருடையனவே. இவருக்கு நம்மாழ்வார் என்னும் திருநாமம் சிறப்புப் பெயராக ஸ்ரீ ரங்கநாதன் மூலமாகக் கிடைத்ததாம். நான்கு வேதங்களின் சாரமாக இவர் அருளிச்செய்தவை திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என்னும் நான்கு திவ்வியப் பிரபந்தங்களாம். மற்றுள்ள ஆழ்வார்களின் திவ்வியப் பிரபந்தங்களைக் காட்டிலும், இவ்வாழ்வாருடைய மற்ற மூன்று திவ்வியப் பிரபந்தங்களையுங் காட்டிலும் திருவாய்மொழியே மிக்க மேன்மைபெற்று விளங்குவது. கம்பர்பெருமான் இயற்றிய சடகோபரந்தாதியில் "தேவிற் சிறந்த திருமாற்குத்தக்க தெய்வக் கவிஞன், பாவிற் சிறந்த திருவாய்மொழி பகர் பண்டிதனே" என்றுள்ள செய்யுளினால் நம்மாழ்வாருடையவும் திருவாய்மொழியினுடையவும் மேன்மையைச் சுருக்கமாக உணரலாம்.

திருவாய்மொழியானது நூறு பதிகங்களாக அமைந்த ஆயிரத்தொரு நூற்றிரண்டு செய்யுள்களை உடையது. நூறு பாடல்களை "ஒரு பத்து" என வழங்கும் வைணவ சம்பிரதாயப்படி பத்துப்பத்தாக அமைந்தது இது. இப்பிரபந்தம் முழுவதும் அந்தாதித் தொடையில் பாடப்பட்டது. இவர் அருளிச்செய்த மற்ற மூன்று திவ்வியப் பிரபந்தங்களும் அந்தாதியே. இவ்வந்தாதி, சொற்றொடர் நிலை, பொருட்டொடர் நிலை என்ற தொடர் நிலைவகை இரண்டனுள் சொற்றொடர் நிலையெனக் கருதத் தக்கதாயிருக்கும். நெடுக ஒரு கதையாகக் கூறுதலல்லாமல் தோத்திர ரூபமாக அருளிச்செய்யப்பட்ட பாசுரங்களாதலால் சொற்றொடர் நிலையந்தாதியாகக் கொள்ளக் குறையில்லையாயினும், இதிலுள்ள பாசுரங்கள் பொருளில் ஒன்றையொன்று தொடர்ந்து நிற்பது தோன்ற அறிவிற் சிறந்த ஆசிரியர்கள் வியாக்கியானித்தருள்வதனால் இது பொருட்டொடர் நிலையுமாம். "பொருளினுஞ் சொல்லினுமிருவகை தொடர்நிலை" என்னும் தண்டியலங்காரச் சூத்திரத்தின் உரையில், "இரண்டென்றது வகை என்றமிகையான் மூன்றாவது பொருளினுஞ் சொல்லினுந் தொடர்தலுமுண்டெனக் கொள்க" என்றுள்ளது. அதற்குத் திருவாய்மொழியே சான்றாமெனக் கொள்க. சொற்றொடர் நிலையந்தாதிக்குச் சான்றான

பல பிரபந்தங்களும், பொருட்டொடர் நிலையந்தாதிக்குச் சான்றான பல பிரபந்தங்களும் காணக் கிடைப்பினும், பொருளினுஞ் சொல்லினுந் தொடரும் அந்தாதிக்குத் திருவாய்மொழியே தக்க சான்றாமென்க.

தொல்காப்பியத்துச் செய்யுளியலிற் கூறப்பட்ட அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு—என்ற எண்வகை வனப்பினுள் இந்த நூல் விருந்தென்னும் வனப்பின்பாற்படும். 'விருந்தே தானும் புதுவது கிளந்த யாப்பின் மேற்றே'' என்ற தொல்காப்பியச் சூத்திர உரையில் நச்சினார்க்கினியர் ''விருந்து தானும் பழங்கதை மேலதன்றிப் புதிதாகத் தாம் வேண்டியவாற்றாற் பல செய்யுளுந் தொடர்ந்து வரத் தொகுத்துச் செய்யப்படுந் தொடர்நிலை மேலது'' என்றுரைத்து, ''அது முத்தொள்ளாயிரமும், பொய்கையார் முதலாயினோர் செய்த அந்தாதிச் செய்யுளும் என உணர்க'' என்று முடித்திருத்தல் காண்க.

திவ்வியப் பிரபந்தங்கள் எல்லாவற்றினுள்ளும் திருவாய்மொழியின் ஏற்றத்தை ஸ்ரீமந்நாதமுனிகள் முதலான முன்னோர்கள் உலகமறியச் செய்திருக்கும் வகையொன்று கேண்மின். மற்றைப் பிரபந்தங்கள் விஷ்ணுவாலயங்களில் திருவீதிகளிலும் ஓதப்படுவது போல, திருவாய்மொழியை ஒருபோதும் வீதியில் ஓதலாகாதென்றும், எம்பெருமானே ஆழ்வாராசாரியர்களோ ஆஸ்தானத்தில் எழுந்தருளியிருக்கும்போது மட்டுமே சேவிக்கத் தக்கதென்றும் பெரியாரிட்ட கட்டளை இற்றைக்கும் பரிபாலிக்கப்பட்டுவருவது திவ்வியப் பிரபந்தங்கள் வழங்கும் நாடுகளிலெங்கும் காணத் தக்கதாம். திருவாய்மொழியிலுள்ள தெல்லாம் வேதப் பொருள்களேயென்றும், வேதப் பொருள்களைத் திரட்டி நம்மாழ்வார் திருவாய்மொழி பாடியருளாதிருப்பின் வைணவக் கோயில்களில் நடைபெறும் திருவிழாக்கள் சிறிதும் சோபிக்கமாட்டாவென்றும் கம்பர்பெருமான் துணிந்து கூறியுள்ளார், சடகோபரந்தாதியில்:

> **"அந்தமிலா மறையாயிரத் தாழ்ந்தவரும் பொருளைச்**
> **செந்தமிழாகத் திருத்திலனேல், நிலத்தேவர்களும்**
> **தந்தம்விழாவு மழகுமென்னும்? தமிழார் கவியின்**
> **பந்தம் விழாவொழுகுங் குருகூர்வந்த பண்ணவனே."**

என்பது அந்தச் செய்யுள்.

வடமொழி வேதப் பொருள்களே திருவாய்மொழியில் விளங்குவனவென்பதைக் கம்பர் எதுகொண்டு உணர்ந்தாரெனின்; வேதக்கடல் குடைந்தாடின நாதமுனிகள் ஆளவந்தார்போல்வாரான பேராசிரியர்கள் பரிக்கிரகித்தது கொண்டேயென்க. தத்துவம், ஹிதம், புருஷார்த்தம் என்னும் மூவகைப் பொருள்களையும் வடமொழி வேதங்களிலிருந்தே உய்த்துணர வல்லவர்களான அப்பேராசிரியர்கள் அவற்றைவிட்டு இப்பாடல்களையே தஞ்சமாகக் கொண்டும், இவற்றுக்குத் திவ்வியப் பிரபந்தமென்று பெயரிட்டும், இவற்றில் பாடப்பெற்ற தலங்களைத் திவ்விய தேசமென வழங்கியும், இவற்றைப் பாடினவர்களைத் திவ்விய ஸூரிகளென்று சிறப்பித்தும் போந்ததைக் குறிக்கொள்பவர்கட்கு இவ்வேற்றங்களெல்லாம் தெற்றென விளங்கும்.

திவ்வியப் பிரபந்தங்களான நாலாயிரம் பாசுரங்கட்கும் பெரியவாச்சான்பிள்ளை யென்னும் பேராசிரியர் வியாக்கியானமிட்டருளினர். திருவாய்மொழியாயிரத்திற்கு மட்டும், திருக்குருகைப்பிரான் பிள்ளானென்னும் ஆசிரியர் ஆருயிரப்படி யுரையும், நஞ்சீயர் ஒன்பதினுயிரப்படியும், பெரியவாச்சான்பிள்ளை இருபத்துநாலாயிரப்படியும், வடக்குத் திருவீதிப்பிள்ளை ஈடு முப்பத்தாருயிரப்படியும், வாதிகேஸரி அழகிய மணவாளச் சீயர் பன்னீராயிரப்படியும் ஆக ஐந்து வியாக்கியானங்களை யருளிச்செய்தார்கள். இவை தவிர, திருவாய்மொழியின் சாரப் பொருள் கூறும் வகையில் வேதாந்த ஆசிரியர், மணவாளமாமுனிகள் முதலான ஆசாரியர்கள் வடமொழி தென்மொழிகளில் அருளிய நூல்களுமுள்ளன. திருவாய்மொழிக்குப் பிரதான வியாக்கியானகர்த்தாவான வடக்குத் திருவீதிப்பிள்ளையின் திருப்புதல்வரான பிள்ளைலோகாசாரியர், அழகிய மணவாளப் பெருமாள் நாயனுர் என்னும் ஆசிரியர் இருவர் முறையே அருளிச்செய்த ஸ்ரீவசனபூஷண மும் ஆசார்ய ஹ்ருதயமும் திருவாய்மொழியின் அரியபெரிய பொருள்களையே ஆராய்ச்சி முறையில் ஆழ்ந்து அற்புதமாக வெளியிட்டிருப்பனவாம். இவற்றுள் ஆசார்யஹ்ருதய நூலின் பெருமை அளவிடற்பாலதன்று. திருவாய்மொழியின் ஒப்புயர்வற்ற பெருமை களும் சீரிய பொருள்களும் அந்நூலில் உணர்த்தப்படுவதுபோல் வேறு எந்நூலிலுமில்லை யெனின் மிகையாகாது.

இனித் திருவாய்மொழியில் உட்புகுந்து சில மருமங்களையும் தத்துவங்களையும் உணர்த்துவோம். வடமொழி வேதத்தை முதன்முதலாக நான்முகக் கடவுள் பிரவசனஞ் செய்ததுபோல் இத் தமிழ்வேதத்தையும் நம்மாழ்வார் நான்முகன்போலவேயிருந்து வெளியிட்டருளினுர். எங்ஙனேயென்னில்; ஆழ்வார் தாம் ஒருவரே திருவாய்மொழியைப் பேசினரெனினும் நான்குமுகமாகப் பேசியுள்ளபடியை இதனில் காண்கிறோம். தாம் குருகூர்ச் சடகோபனுகவே (ஆண்மை மாருமல்) இருந்துகொண்டு பேசினது ஒரு வகை. இங்ஙனே பேசினவை எழுபத்துமூன்று பதிகங்கள். ஆண்மைநீங்கிப் பெண்மையெய்தி, அதில் தலைமகளென்றும் தாயென்றும் தோழியென்றும் பாவனை கொண்டு பேசின வகைகள் மூன்று. தலைமகள் பாசுரமாக நிகழ்ந்தவை பதினேழு பதிகங்கள். தாய்ப் பாசுரமாக நிகழ்ந்தவை ஏழு பதிகங்கள். தோழி பாசுரமாக நிகழ்ந்தவை மூன்று பதிகங்கள். ஆக நான்குமுகங்களால் பாடப்பெற்றது நூறு பதிகங்கள்கொண்ட திருவாய்மொழியாயிரம். இயற்கையான ஆண்மையைவிட்டுப் பெண் பாவனை கொள்வது எதற்காக? அப் பெண்பாவனையிலும் மகள், தோழி, தாய் என்னும் வேற்றுமைகள் எதற்காக? என்ற கேள்விகளுக்குச் சுருக்கமான விடை கேண்மின். புருஷோத்தமனை பகவானையநுபவிக்குமிடத்து ஆண்மை விலகுவதும் பெண்மை புகுவதும் இயல்பு. உலகில் நாயகி தனது நாயகனொருவனுக்கே அடிமைப்பட்டிருத்தலாகிற பாரதந்திரியத் தன்மை யைக் கொண்டிருக்குமாறுபோல, பரமபக்தர்கள் எம்பெருமானொருவனுக்கே அடிமைப் பட்டிருக்குந்தன்மை திட்பட்டு விளங்குவதுதான் பெண் பாவனையின் மருமம். இதனைக் குலசேகராழ்வார் தமது திருமொழியில் வித்துவக் கோட்டம்மான் பதிகத்தில் "கொண்டானையல்லாலறியாக் குலமகள் போல்" என்ற பாசுரத்தினுல் விளக்கினர். ஆழ்வார்திறத்துக்காணும் பெண்மை சாமானியமானதன்று; "கடிமாமலர்ப்பாவை யொப்பாள்"—என்றும் "பின்னைகொல் நிலமாமகள்கொல் திருமகள்கொல் பிறந்திட்டாள்"

என்றும் கூறியுள்ளபடியே ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவியென்னும் தேவதேவ திவ்ய மஹிஷிகளின் பாவனையேயுள்ளது. எம்பெருமான் அத்தேவிமாரிடத்துக் காதல் கொண்டதுபோலவே ஆழ்வாரிடத்துங் காதல் கொண்டிருப்பது பலபல பாசுரங்களினால் நன்கு விளங்கும். மகள்பாசுரமாக வெளிவரும் பதிகங்களில் எம்பெருமானைப் பெறுதலில் ஆழ்வார்க்கு உள்ள விரைவுமிகுதி காணலாகும். தாய்ப் பாசுரமாக வெளிவரும் பதிகங்களில் பேற்றுக்கு விரையவேண்டாத திண்ணிய உறுதி காணலாகும். தோழி பாசுரமான பதிகங்களில் ஆழ்வாரும் எம்பெருமானுமாகிற தலைவிக்கும் தலைமகனுக்குமுள்ள ஒழிக்கவொழியாத உறவு அற்புதமான முறையில் விளக்கப்பெறும்.

உபயவேதாந்தப் பிரவர்த்தகர்களென்று விருதுபெற்ற ஆளவந்தார் எம்பெருமானார் கூரத்தாழ்வான் (அவரது திருக்குமாரரான) பட்டர் நம்பிள்ளை முதலான மஹாவித்துவான்கள் கைக்கொண்டு அரும்பெரும் பொருள்களைக் கங்காப்ரவாஹம் போன்ற உபந்யாஸங்களினால் பெருக்கியதுகாரணமாகவே திருவாய்மொழி மிக மேம்பாடுற்றது. அத்தகைய பொருள்களில் சிலவற்றையே இங்கு விவரிக்க விரும்புகின்றேன்.

திருவாய்மொழியின் தொடக்கப் பாசுரம் 'உயர்வறவுயர் நலமுடையவன்' என்பது. அதன் ஈற்றடியில் "துயரறு சுடரடி"யென்றுள்ளது. 'துயரறு' என்பதற்கு (அடியவர்களின்) துயரையறுக்கின்ற என்னும் பொருள் கூறுவதில் இழுக்கொன்றுமில்லை. ஆனால் ஸ்ரீராமாநுஜர் கூறும் பொருள் இன்சுவை மிக்கதாகவுள்ளது. துயரறுக்கும் என்று கொள்ளாமல் 'துயரறும்' என்று உரைத்து, அடியார் துயருற்றிருந்த காலத்துத் தானும் துயருற்றிருந்து, அவர்கள் துயரற்றவாறே தானும் துயரறுவது எம்பெருமானது இயல்பாக இதிஹாஸ புராண வரலாறுகளினால் நன்கு தெரிவதனாலும், குணத்துக்கு எல்லைநிலம் இதுவேயாதலாலும் இப்பொருளை ஆதரித்தனர் ஸ்ரீராமாநுஜர்.

திருவாய் மொழியில் நான்காவது பதிகம், 'அஞ்சிறைய மடநாராய்' என்று தொடங்குவது. இது சில பறவைகளை எம்பெருமானிடத்துத் தூது செல்ல இரப்பது. இதில் (பாட்டு 4-ல்) "என்னீர்மை கண்டிரங்கி இது தகாதென்னாத என்னீல முகில் வண்ணர்க்கு என்சொல்லி யான் சொல்லுகேனோ?" என்றுள்ளது. எனது நிலைமையைக் கண்டு இரங்கி இவளை நாம் அணுகாதிருப்பது தகாது-என்றிராதவர்க்கு நான் என்ன வார்த்தை சொல்லுவது? என்று பறவைகளை நோக்கிக் கூறுவதாக உள்ளது. இது தூது விடுமிடத்ததாதலால் பிரிவில் சொல்லும் வார்த்தையென்பது ஐயமற்றது. பிரிவில் இத்தலைவி யிருக்குமிருப்பை யாரேனும் சொல்லத் தலைவன் கேட்கலாமேயொழிய, தான் நேரில் காணமுடியாதன்றோ? ஆகவே, 'என்னீர்மை கேட்டிரங்கி' என்றிருக்கத்தகுமேயல்லது 'கண்டிரங்கி' என்றிருக்கத் தகாதேயென்று சங்கித்த ஒரு தமிழ்ப் புலவனுக்கு, பட்டர் என்னும் ஆசிரியர், பண்டிதரே! நன்கு கேட்டீர்; ஆனால் "புல்லிக்கிடந்தேன் புடைபெயர்ந்தேன், அவ்வளவில் அள்ளிக்கொள்வற்றே பசப்பு" என்ற குறளும் 'ஊருண் கேணி உண்துறைத்தொக்க பாசியற்றே பசலை, காதலர் தொடுவுழித் தொடுவுழி நீங்கி விடுவுழி விடுவுழிப் பரத்தலானே" என்கிற குறுந்தொகைச் செய்யுளும் உமக்குத்தெரியாது போலும்' என்று கூறி, இவற்றைப் பரக்க உபந்யஸித்து அப்பண்டிதரைத் தெளிவித்தனர்.

இதன் விவரணம் வருமாறு: 'புல்லிக்கிடந்தேன் புடைபெயர்ந்தேன்' என்ற குறள், திருக்குறளில் பசப்புறுபருவரல் என்னும் அதிகாரத்தில் ஏழாவதாகும். இது காதலியின் பேச்சு. முன்பொரு நாள் நான் காதலரை அழுந்தத் தழுவிக் கிடந்தேன்; கை மாறுவதற்காகச் சிறிது புடைபெயர்ந்தேன்; ஒரு நொடிப்பொழுது விலகின அளவிலும் பசலை நிறம் வந்து உடம்பெலாம் மூடிக்கொண்டது' என்பது இக்குறளின் பொருள். இதனால் நாயகனைப் பிரியாமல் கூடியிருக்குங் காலத்திலேயே படும் அலமாப்பு தெரிய வரும். இனி, குறுந்தொகைச் செய்யுள் இக்கருத்தையே உதாரணத்துடன் வெளியிட்டுள்ளது. (குறுந்தொகையில் முந்நூற்றுத் தொண்ணூற்றொன்பதாவது செய்யுள். 'ஊருண்கேணி...... பரத்தலானே' என்பது. ஊரில் உள்ள மக்களாலே நீர் எடுத்து உண்ணப்பெறுகின்ற கேணியினுள்ளே படர்ந்து கிடக்கும் பாசி போன்றது பசலைநிறம். பாசியின் தன்மை எத்தகைத்தென்றால், தண்ணீரில் நாம் கையைவைத்தோமாகில் கைபட்ட இடங்களில் பாசி நீங்கும்; கையை எடுத்து விட்டோமாகில் உடனே நீங்கின பாசி மூடிக் கொள்ளும்; பசலை நிறமும் இது போன்றதே; காதலர் தொடுவுழித் தொடுவுழி—நாயகன் தொட்ட தொட்ட இடங்கள்தோறும் பசலை நிறம் நீங்கி; விடுவுழி விடுவுழி பரத்தலான்—விட்டவிட்ட இடங்கள்தோறும் அது வியாபிப்பதனாலேயென்கை. பிரிவாற்றாமையினால் மாதர்களின் மேனியில் தோன்றும் நிறவேறுபாடு பசலை நிறமெனப்படும். நாயகனைவிட்டுப் பிரிந்த காலத்திலே நாயகியின் உடலில் இந்த நிற வேறுபாடு தோன்றுவது வியப்பன்று; ஒரு படுக்கையில் படுத்துக் கூடியிருக்கும்போதே கொடிப் பொழுது கைநெகிழ்ந்த அளவில் இந்தப் பசலைநிறம் படர்கின்றதென்றால் பிரிந்த நிலையில் கேட்கவேண்டியதில்லை யன்றோ. பட்டரிடத்தில் கேள்வி கேட்ட புலவர்க்கு இப்போது என்ன சமாதான மாயிற்றென்னில்; தூது ப்ரசுரம் பிரிவு காலத்தில் சொல்லுவதானாலும் பண்டு கூடியிருந்த காலத்தில் நிகழ்ந்த ஸம்பவத்தையே (என்னீர்மை) என்பதனால் நினைப்பூட்டுவதாதலால் கேட்டிரங்கி யென்னவேண்டுவதில்லை, கண்டிரங்கியென்றே சொல்லத் தகும் என்ற தாயிற்று. நம் பூருவாசாரியர்களுக்குப் பண்டைச் சங்க நூல்களிலும் இருந்த புலமை இதனால் அறிய எளிதாம். இது நிற்க.

பெரிய பண்டிதர்களென்று பேர்பெற்றவர்கட்கும் தோன்றாத அரும்பொருள்களை நம்பிள்ளை யெடுத்துக்காட்டுந்திறன் மிகமிக அதிசயிக்கத் தக்கதாம். அத்தகைய பொருள்களில் ஒன்றே காட்டுதும். திருவாய்மொழியில் பதினாறாவது பதிகம்—'வைகுந்தா மணிவண்ணனே' என்று தொடங்குவது. இதில் (முதற்பாட்டில்) ஈற்றடி 'உன்னை நான் பிடித்தேன்கொள் சிக்கெனவே' என்பதாம். 'எம்பெருமானே! என்னை நீ சிக்கெனப் பிடித்துக்கொள்' என்று ப்ரார்த்திக்க வேண்டியிருக்க 'உன்னை நான் சிக்கெனப் பிடித்தேன்' என்றது மாறுபாடாகத் தோன்றும். இங்கு நம்பிள்ளையுணர்த்தும் மருமம் கேளீர். இப்பதிகத்திற்குக் கீழே கழிந்த 'அந்தாமத்தன்பு செய்து' என்னும் பதிகத்திலே எம்பெருமான் ஆழ்வாருடனே வந்து கலந்து தான் பெறாப் பேறு பெற்றானாயிருந்தான்; அப்படியிருக்கையில் ஆழ்வார் 'அல்லாவியுள் கலந்த!' என்று தம்முடைய நைச்சியத்தைக் காட்டி, 'அந்தோ, பொருளல்லாதவென்னோடே இப்படிக் கலந்து கிடக்கிறானே பரமபுருஷன்!' என்று தலை சீய்த்துப் பேசினார். அதிலிருந்து எம்பெருமானுக்கு ஒரு கலக்கமுண்டாயிற்று. 'இவர் நைச்சியம் பாவிக்கத் தொடங்கிவிட்டாரே; நம்மைவிட்டு அகல்வர்

போலிருக்கிறதே! இவரைப் பிரிந்து நாம் எங்ஙனம் தரித்திருப்பது' என்று. எம்பெருமான் இங்ஙனே கலங்கியிருக்கும் இருப்பையறிந்த ஆழ்வார் அப்பிரானது கலக்கம் தீர அவனுக்கு அபயமளிக்கிறார். 'உன்னை நான் பிடித்தேன் கொள் சிக்கெனவே' என்று. 'நான் உன்னை விட்டகல்வேனென்று மருண்டு அஞ்சாதே' என்று வார்த்தையைப் பூர்த்தி செய்துகொள்ளவேண்டும். இக்கருத்தை மணவாளமாமுனிகள் திருவாய்மொழி நூற்றந்தாதியில் (பா. 16.) "வைகுந்தன் வந்து கலந்ததற்பின் வாழ்மாறன், செய்கின்ற நைச்சியத்தைச் சிந்தித்து,—நைகின்ற தன்மைதனைக் கண்டு உன்னைத் தான் விடேனென்றுரைக்க, வன்மையடைந்தான் கேசவன்' என்ற வெண்பாவினால் விளக்கியருளியிருப்பது காண்க. பகவான் கீதையில் "ஞானியை விட்டுப் பிரிந்து நான் ஆற்றகில்லேன்" என்று தானே வெளியிட்டிருக்குமதற்கு மிக இணங்கின பொருள் இது. ஆளவந்தார் தமது ஸ்தோத்ர ரத்னத்தில் "மஹாத்மபிர் மாம் அவலோக்யதாம் நய" என்றவுடனே அந்த மஹாத்மாக்களின் பெருமையை முன்னடிகளிற் சொன்னதிற் காட்டிலும் விலக்ஷணமாகச் சொல்ல விரும்பி "க்ஷணேபி தே யத்விரஹோதிதுஸ்ஸஹ:" என்றருளிச் செய்ததும் ஈண்டு நினைக்கத்தக்கது. எம்பெருமானைப் பிரிந்து ஆழ்வார் படுமது பெரிதன்று; ஆழ்வாரைப் பிரிந்து எம்பெருமான் படும்பாடுதான் மிகப்பெரியது என்றுணர்த்தியவாறு.

இங்ஙனே பல நூற்றுக்கணக்கான அரும்பெரும் பொருள்கட்கு நிலமான திருவாய்மொழியைக் கொண்டு போதுபோக்குவது ஆழ்வார் மரபில் தோன்றிய வைணவர்கட்கு இன்றியமையாததாம். கூரத்தாழ்வான் தாமருளிச்செய்த வரதராஜஸ்தவத்தின் முடிவில் "ராமாநுஜாங்க்ரி சரணோஸ்மி" என்னும் சுலோகத்தில்—ஸ்ரீ ராமாநுஜரை ஆளவந்தாருடைய குலவிளக்காகக் கூறி, ஆளவந்தாரை நாதமுனிகளின் குலக்கொழுந்தாகக் கூறி, அந்த நாதமுனிகளைப்பற்றிக் கூறுகையில் [வம்ச்ய: பராங்குச முநேஸ் ஸச] "நாதமுனிகள் நம்மாழ்வாருடைய திருவம்சத்தில் தோன்றியவர்" என்றருளிச் செய்திருப்பது குறிக்கொள்ளத்தக்கது. ஆளவந்தாரை நாதமுனிகளின் குலத்தவராகக் கூறினதோடு, நாதமுனிகளை நம்மாழ்வாருடைய குலத்தவராகக் கூறினதோடு ஒசியில்லையாயிற்று. நம் பரமவைதிக பரமாசார்ய கோஷ்டியில் நம்மாழ்வார் இப்படியன்றோ குலாவப்பட்டுள்ளார்...... இவ்வளவோடு அடியேனுடைய விண்ணப்பத்தை முடித்துக்கொள்ளுகிறேன். ✽

## நம்மாழ்வாருடைய நித்யசிந்தனைக்கினிய நவதிருப்பதியெம்பெருமான்களில் ஒரு திருப்பதி யெம்பெருமானை யநுபவிக்கக் குதுகலித்து மாடக்கொடிமதிள் தென்குளந்தை வண்குடபால் நின்ற மாயக்கூத்தனைச் சிறிது அநுபவிக்கிறேன்.

**மாயக்கூத்தன்** = இதற்குப் பலபடியாகப் பொருள் கூறலாம். கீதையில் ***தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா*** என்று தானே சொல்லிவைத்தபடி குருவி பிணைத்த பிணைபோலே மாயப்பிணையொன்று பிணைத்து அதிலே எல்லாரையும் மயக்கி இப்படியொரு கூத்துக்காண்பவன். அன்றியே, அந்த கீதையிலே ***ஸம்பவாம்யாத்ம மாயயா*** என்றருளிச் செய்தபடியே ஸங்கல்பமென்னும் பொருளதான மாயையினாலே திருவவதாரங்கள் செய்து அவற்றிலே குடக்கூத்து, மரக்கால்கூத்து, குரவைக்கூத்து

என்னும்படியான பலவகைக்கூத்துக்களைச்செய்து "மாயக்கோலப்பிரான் தன் செய்கை நினைந்து மனங்குழைந்து" என்னும்படியாக்குமவன். அன்றியே, *சூட்டு நன்மாலைகள் தூயனவேந்தி விண்ணோர்கள் நன்னீராட்டி அந்தூபந்தராநிற்கவேயங்கு ஓர் மாயையினு லீட்டியவெண்ணெய் தொடுவுண்ணப் போந்து இமிலேற்று வன்கூன் கோட்டிடை யாடினை கூத்து அடலாயர்தம் கொம்பினுக்கே* (திருவிருத்தம்—21) என்கிறபடியே நம் போல்வார்க்கு நெஞ்சினாலும் நினைக்கவொண்ணாததொரு மாயக்கூத்தைச் செய்பவ னென்னவுமாம்.

வெண்ணெய் விழுங்கி வெறுங்கலத்தை வெற்பிடையிட்டு அதனோசை கேட்டு நிற்பது, புண்ணில் புளிப்பெய்தாலொக்குந் தீமைகளை மனைதோறுஞ் செய்வது, உருகவைத்தகுடத்தொடு வெண்ணெய் உறிச்சியுடைத்திட்டுப் போந்து அருகிருந்தார் தம்மை யநியாயஞ்செய்வது, இல்லம்புகுந்தொருமகளைக் கூவிக் கையில் வளையைக் கழற்றிக்கொண்டு கொல்லையில் நின்றுங் கொணர்ந்துவிற்ற அங்கொருத்திக் கவ்வளை கொடுத்து நல்லனநாவற்ப ழங்கள்கொண்டு நானல்லேனென்று சிரிப்பது, ஆற்றிலிருந்து விளையாடுபவர்களைச் சேற்றாலெறிந்து வளைதுகில் கைக்கொண்டு காற்றிற் கடியனாயோடி யகம்புகுவது, வண்டமர் பூங்குழலார் துகில் கைக்கொண்டு விண்டோய் மரத்தேறுவது, மச்சொடு மாளிகையேறி மாதர்கள் தம்மிடம் புக்குக் கச்சொடுபட்டைக் கிழித்துக் காம்புதுகிலவை கீறி நிச்சலுந்தீமைகள் செய்வது, தாயெடுத்த சிறுகோலுக்கு உளைந் தோடுவது, ஒளியாவெண்ணெயுண்டானென்று உரலோடாய்ச்சி யொண்கயிற்றால் விளியாவார்க்க வாப்புண்டு விம்மியழுவது, கஞ்சனுங்காளியனுங் களிறு மருது மெருதும் வஞ்சனையின் மடியவளருவது, ஆயனாகியாயர்மங்கை வேயதோள் விரும்பியது, குன்றெடுத் தாநிரைகாத்துக் கோவலனாய்க் குழலூதியூதிக் கன்றுகள் மேய்த்துத் தன் தோழரோடு கலந்துடன் வருவது, சீமாலிகனவனோடு தோழமைக்கொண்டு சாமாறவனை யெண்ணிச் சக்கரத்தால் தலைகொண்டது, நாறியசாந்தம் நமக்கிறை நல்கென்னத் தேறியவளும் திருவுடம்பிற்பூச ஊறியகூனினையுள்ளே யொடுங்க ஏறவுருவியது, வார்கடா வருவியானை மாமலையின் மருப்பிணைக் குவடிறுத்துருட்டி ஊர்கொள்திண்பாகனுயிர்செகுத்து அரங்கின் மல்லரைக்கொன்று போர்கடாவரசர் புறக்கிட மாடமீமிசைக் கஞ்சனைத் தகர்த்தது, பொய்ச்சூதில் தோற்ற பொறையுடை மன்னர்க்காய்ப் பாரதம் கைசெய்தது, பற்றலர் வீயக் கோல்கையில் கொண்டு மலைபுரைதோள் மன்னவரும் மாரதரும் மற்றும் பலர் குலைய நூற்றுவரும் பட்டழியப் பார்த்தன் சிலைவளையத் திண்டேர்மேல் முன்னின்றது, பாழியால் மிக்க பார்த்தனுக்கருளிப் பகலவனொளிகெடப் பகலே ஆழியாலன்றங்காழியை மறைத்தது, கொல்லாமாக்கோல் கொலைசெய்து பாரதப்போரெல்லாச் சேனையுமிருநிலத் தவித்தது, மாதவத்தோன் புத்திரன் போய் மறிகடல்வாய்மாண்டானை ஓதுவித்த தக்கணையா உருவுருவே கொடுத்தது, படர்புகழ்ப் பார்த்தனும் வைதிகனுமுடனேறத் திண்டேர் கடவிச் சுடரொளியாய் நின்ற தன்னுடைச் சோதியில்வைதிகன்பிள்ளைகளை யுடலொடுங் கொண்டு கொடுத்தது முதலான மாயக்கூத்துக்கள் பலவும் இங்கு அநுஸந்திக்கவுரியவை.

இங்ஙனம்,

**ஸ்ரீகாஞ்சீ P. B. அண்ணங்கராசாரியர்,**

ஸ்ரீ ராமாநுஜன் பத்திரிகையாசிரியர்.

15—2—68.

Regd. No. 2975.

ஸ்ரீ:

# SRI RAMANUJAN

*Editor*: P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3.

# ஸ்ரீ ராமாநுஜன் 231

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 6 ஜீவியச் சந்தா ரூ. 116.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார்ஜீயர் திருவடிகளே சரணம்

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி *
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி* — ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம் வாழி *
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1968 மார்ச்மீ பிலவங்க௵ பங்குனிமீ

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரிய ஸ்வாமியின்
# ப்லவங்க௵ மீன விசாகோத்ஸவப் பத்திரிகை.

ஸ்ரீ ஸ்வாமியின் எழுபத்தேழாவது திருநக்ஷத்திர பூர்த்தியை முன்னிட்டு
*ஸ்ரீ காஞ்சியில் ஸ்வாமியின் திருமாளிகையில்*

நாளது மாசிமீ 27உ (10-3-68) ஞாயிற்றுக்கிழமை புனர்வசு முதல்
பங்குனிமீ 6உ (19-3-68) செவ்வாய்க்கிழமை திருவிசாகம் வரை

வேதபாராயணம், திவ்யப்ரபந்தஸேவை, ரஹஸ்யாநுஸந்தானம்,
ஸ்தோத்ரபாடம், வித்வான்களின் உபந்யாஸம் இவை நடைபெறும்.
ஆப்தர்கள் அனைவரும் கூடியிருந்து சிறப்பாக நடப்பிக்கும்படி
ப்ரார்த்திக்கப்படுகிறார்கள்.

வேதபாராயண கோஷ்டிகள் கடந்த ஸம்வத்ஸரங்களிற்போலவே
ஸாமவேதம், யஜுர்வேதம் க்ரமாந்தம்
திருவீதிவலத்துடன் நடைபெறும்.

இங்ஙனம் :

காஞ்சீபுரம்,
25—2—68.

ப்ரதிவாதி பயங்கரம் செல்வமணி என்கிற
**ரங்கநாத தாஸன்.**

SRI KANCHI MAHA VIDWAN JAGADACHARYA SIMASANADHIPATHI

# P. B. ANNANGARACHARYA SWAMI'S
## SEVENTY EIGHTH BIRTH DAY CELEBRATIONS

The Seventy Eighth Birth day of Sri Swami is being celebrated this year at his residence in Kanchi from 10—3—68 to 19—3—68 Tuesday Vedas, Divya Prabandhams, Stotras and Rahasyas will be chanted. Procession of the Veda Goshti and religious lectures will also take place as usual.

You are cordially invited to attend,

Kancheepuram,
25—2—68.

CHELLAMANI alias
P. B. RANGANATHACHARYA.

### ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபா விளம்பரம்

1966 ஜனவரிமீ புதுப்பிக்கப்பட்ட ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபைக்கு வருடச் சந்தா ரூ. 25—00. செலுத்தி மெம்பர்களாகச் சேரவேண்டியது. அவர்களுக்கு ஸ்ரீராமாநுஜன் பத்ரிகை தனிச் சந்தா இல்லாமல் அனுப்பப்பட்டுவருவதுடன் இருபது ரூபா விலையுள்ள புத்தகங்களும் அளிக்கப்படும். அவர்கள் நம்முடைய புத்தக ஜாபிதாவைத் தருவித்துப் பார்த்து அதில் அவர்களுக்கு விருப்பமான நூல்களுக்கு ஆர்டர் செய்யலாம்.

இப்படிக்கு,

ஷை ஸபையின் பிரஸிடெண்டு P. B. A.

நமது ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாய நூல்கள் கிடைக்குமிடங்கள்:—

(1) க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்–3.

(2) V. N. Devanathan,
213. Govindappa Naicken St., G. T. Madras.

(3) M. A. KRISHNAMMAL, Advocate,
20, South Mada Street, Triplicane, Madras-5.

(4) A. RAMANUJACHARI, B. A.,
A 230 E. Type, Pandara Road, New Delhi.-11.

---

If un-delivered please return to:

**P. B. ANNANGARACHARYA,**
KANCHEEPURAM-3.

---

5. Shri.P.A.Thiruvenkatacharya,
51,Narayana Mudali Street,
MADRAS - 1.

---

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.

Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street. Kanchipuram-3.

# P. B. A. சுவாமிகளின் நூல்களுக்குச் சுருக்கமான விளம்பரம்.

P. B. A. ஸ்வாமிகளால் இயற்றப்பட்டு அச்சிடப்பட்ட நூல்கள் பன்னிரண்டு துறைகளில் அமைந்தவை. அவற்றுக்கு விரிவான கியாடலாக் தருவித்துக்கொள்வது. இங்கு அப் பன்னிரண்டு துறைகளையும் விளக்கி ஒவ்வொரு துறையிலும் வெளிவந்துள்ள நூல்களைச் சுருக்கமாகக் காட்டுகிறோம்.

1. **பூர்வாசார்யர் பெருமை நூல்கள்:** ஆழ்வார்களின் வைபவங்களும் வேதாந்த வாசிரியர் மணவாள மாமுனிகள் வரையிலுள்ள ஸகல ஆசாரியர்களின் வைபவங்களும்.

2. **இதிஹாஸ புராண சரித்திர நூல்கள்:** வான்மீகி ராமாயணம் பூர்த்தியாக வசன நடை. திவ்வியப்பிரபந்தங்களில் ஆழ்வார்கள் அநுசந்தித்த பகவத் கதைகள்.

3. **உபந்யாஸகர்களுக்கு உதவியான உபந்யாஸ நூல்கள்:** பன்னிரு திங்களநுபவம், மதுரோபந்யாஸமாலை, அத்புதோபந்யாஸமாலை, உபந்யாஸ ஸப்தகம், உபந்யாஸ சதத்வயம், திருப்பாவை ஜீயர் ஸத்காலக்ஷேப ஸபை விருந்து திருவல்லிக்கேணி யுபந்யாஸமாலை வைசாகோத்ஸவ உபந்யாஸமாலை, பரமார்த்தபூஷணம், பஞ்சாம்ருதம் முதலான பல நூல்கள்.

4. **வேதாந்த விளக்க நூல்கள்:** விசிஷ்டாத்வைத தரிசனம் விசிஷ்டாத்வைத ஸாரம், விசிஷ்டாத்வைதஸர்வஸ்வம் பகவத்கீதை யறுபத்திரண்டு, ஸ்ரீ பாஷ்யஸாரமான ஸ்ரீ பாஷ்யாதிகரணங்களெழுபத்தாறு முதலியன. இவை வடமொழியில் மிகமிக வுள்ளன,

5. **திவ்யப்பிரபந்த திவ்யார்த்த தீபிகை:** நாலாயிர திவ்வியப் பிரபந்தங்களுக்கும் பூர்த்தியாக விரிவுரைகள் 20 வால்யம். தெலுங்கிலும் ஸம்ஸ்கிருதத்திலும் ஹிந்தியிலும்.

6. **ஆசார்யர்களின் தமிழ் நூல்களுக்கு உரை:** ஞானஸாரம், பிரமேயஸாரம், ஸப்தகாதை, உபதேசரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, ஆர்த்தி......... இவற்றுக்கு விரிவுரை. நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியுரை முதலியன.

7. **ரஹஸ்யார்த்த விளக்க நூல்கள்:** முமுக்ஷுப்படிஸாரம், ஸ்ரீ வசனபூஷணஸாரம், தத்வத்ரயஸாரம். ஆசார்ய ஹ்ருதயஸாரம், ஆசார்ய ஹ்ருதயப்பதவுரை.

8. **ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ரங்களினுரை.** முகுந்தமாலை, ஸ்தோத்ரரத்னம், சதுச்ச்லோகி, கத்யத்ரயம், பஞ்சஸ்தவம், ஸ்ரீ ரங்கராஜஸ்தவம். ஸ்ரீ குணரத்னகோசம், ஸுதர்சந சதகம், யதிராஜவிம்சதி, நக்ஷத்ரமாலிகை, தேசிக ஸ்தோத்ரங்களில் 13. இவற்றுக்கு விரிவான உரை, சிறிய ஸ்தோத்ரங்களனைத்துக்குமுரை.

9. **வேத லக்ஷண விசார நூல்கள்:** வேதாத்யயந ஸர்வஸ்வம், பதபாட பரித்ராணம், பதபாடபரிசுத்தி, வேதபாஷ்ய விமர்சனம் முதலான பத்து நூல்கள்.

10. **ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க நூல்கள்:** ஸத்ஸம்ப்ரதாயார்த்த ஸாரநிதி. ஸத்ஸம்ப்ரதாயார்த்த ரக்ஷா, ஸர்வஜ்ஞஸூக்தி ஸர்வஸ்வம், முதலிய பல நூல்கள்.

11. **லோகாபிராம நூல்கள்:** நற்போது போக்கு, ஸ்ரீ வைஷ்ணவமஹாநிதி, ஸ்ரீராமாநுஜ பூஷணம். கம்பரின்பக்கவித்திரட்டு அஷ்டாதசாஷ்டாதச மஹார்த்த நிதி, ஸ்ரீ ஜயந்தியநுபவம், ஸ்ரீ ராமாநுஜஜயந்தி மலர் முதலான நூற்றுக்கணக்கானவை.

12. **பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்.** ஸதாசார்ய ஸூக்திரக்ஷா, அத்புத சக்தி: வரதன் ஸன்னிதி வரலாறு, ரத்ன பரீக்ஷா, ஸத்ஸம்ப்ரதாய பாஸ்கரன், வம்பவிழ்கோதை தத்துவம். ஜகநாசார்ய ஸூக்திஸுதாநிதி, சதபூஷணீவஜ்ரகுடாரம், சாங்கர சிரோபூஷா, விசிஷ்டாத்வைத விஜயத்வஜம் ஸ்ரீ மஹாவிஷ்ணு ஸாம்ராஜ்யம், ஆழ்வார்களின் காலநிர்ணயம் ஸாத்யபக்தி ஸாதநபக்தி சோதனம், ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்யம் முதலான நூல்கள்,

இப்பன்னிரண்டு துறைகள் தவிர, பதின்மூன்றாவது துறையுமுண்டு. அதில், பூர்வாசாரியர்களருளிச்செய்த காலக்ஷேப க்ரந்தங்கள் யாவும் தமிழ், தெலுங்கு, தேவநாகரி லிபிகளில் பரிஷ்கரித்து அச்சிடப்பட்டுள்ளன. ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர க்ரந்தமாலை தமிழ்லிபியில் ஸமீபத்தில் வெளிவந்தது. இவற்றுக்கெல்லாம் விலைப்பட்டியல் காண்க.

மானேஜர், க்ரந்தமாலை, காஞ்சீபுரம்-3.